குமரன்

ஆரம் 10, முத்து 26

February 09, 1933

Record no. 313

*Kumaraṉ*

*Āram 10, muttu 26*

*February 09, 1933*

Record no. 313

R. NO. M. 1823. 16 பக்கங்கள் KUMARAN WEEKLY.

ாரப் பதிப்பு.

சந்தா விவரம்.

ள்நாடு வருஷம் ன்றுக்கு ரூ. 5-0-0
அற மாதம் 3-0-0
வெளிநாடு வருஷம் ன்றுக்கு ரூ. 7-0-0

# குமரன்

மாதப் பதிப்பு.

சந்தா விவரம்.

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 0-12-0
வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 1-4-0
ஆடிமீ வருஷ ஆரம்பம்.

வியாழன்தோறும் வெளிவரும்.

PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 10. காரைக்குடி, ஆங்கீரச-ஹு தை-மீ உ௯-உ (9—2—33.) முத்து 26.

## ஸ்ரீ சங்கராசாரியார் தந்தி.

### ஸ்ரீ. ரங்கைய்யருக்கு உபதேசம்.

புதுடில்லி பிப்ரவரி, 5—

பூரி ஜகத்குரு சங்கராசாரிபீடமிருந்து ஸ்ரீ வி. எஸ். ரங்கையருக்கு ஓர் தந்தி கிடைத்துள்ளதாகத்தெரிகிறது:-பூரி சங்கராசாரியார் தற்போது பாலக்காட்டில் இருக்கிறார். ஆலயப்பிரவேச மசோதாவையும், தீண்டாமை விலக்கு மசோதாவையும் பலமாகக் கண்டித்து அவர் அடித்துள்ள தந்தியில் குறிப்பிட்டுள்ளதாவது—

பாலக்காடு, பிப்ரவரி, 4—

வைத்தியம் இஞ்சினீரிங் முதலிய விஷயங்களும், மத நம்பிக்கைகளும் சம்பந்தமானவைகளும், ஜனவாக்கின்படி நிர்ணயிக்கத் தகுந்தவைகளென்று நீங்கள் உங்மையிலேயே கூறுவீர்களா? இது சம்பந்தமாக எவ்வித அதிகாரமும்பெறுமல் சட்டசபைக்கு தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளவர்கள் இவற்றை நிர்ணயிப்பது ஒழுங்காகுமா? மேலும் உண்மை சனாதனிகள் தப்பு வழியில் பிரவேசித்துள்ளனரென்று நீங்கள் மதித்தாலும், அவர்களிடையே இம்மசோதாவை நிர்ப்பந்தமாகப் புகுத்துவது ஒழுக்கத்திற்கும் அரசியல் சட்ட ரீதியான முறைக்கும் உடன்பாடாகுமா? சனாதன தர்மத்தையும், சட்ட ரீதியான உண்மை அரசியலையும் மீறியவர்களுக்கு இவ்வித ஒத்து ஊதுவானேன்? இது நிச்சயமாக உங்களுக்கு அழகல்ல. விஷயங்களை மீண்டும் நன்கு யோசித்துப்பார்க்கவேண்டும். இப்பொழுதும் அதிக காலதாமதமாகிவிடவில்லை.

ஜகத்குரு சங்கராசாரியார், பூரி.

## ஸ்ரீ. ரங்கையர் பதில்.

ஸ்ரீ. ரங்கையர் இது சம்பந்தமாய் அசோஸியேட் பிரஸ் நிருபரிடம் கூறியதாவது:—

ஜகத்குருவிடம் எனக்கு மிகவும் மேலான மரியாதையுண்டு. தீண்டாமை விலக்காகிய இவ்விஷயத்தில் நான், மலபாரிலுள்ள பல பழைய குடும்பங்களின் அபிப்பிராயத்திற்கு நேர்விதமாக நடக்கிறேனென்பதையும், எனது குடும்பத்தின்கருத்திற்கு மாறாகவே நடக்கிறேனென்பதையும் நானறியாமலில்லை. ஜகத்குருவின் அபிப்பிராயத்தை எனது ஜன்மபூமியாகிய மலபாரும் ஆதரித்து நிற்கிறதென்பதையும் நானறிவேன். ஆதிசங்கரர் ஓர் மலையாள பிராமணர். இந்தியாவிலிருந்து அவர் பௌத்த மதத்தை ஒழித்து, பிராமண மதத்தை மீண்டும் புனருத்தாரணம் செய்து அவர் ஸ்தாபித்தார். எனவே பூரிஜகத்குரு சங்கராசாரியார், மலபார் கிராமங்களில் சுற்றுப் பிரயாணம் செய்து பிராமண மதத்தை பாதுகாக்கப் புறப்பட்டதில் ஆச்சரிய மொன்றுமில்லை. ஜாதி பகைமையை நீக்கி, அஹிம்சா தர்மத்தை நிலை நாட்டிவரும் மகாத்மா அநேகமாக புத்தருக்கு சரிசமமாவாரென்று கூறலாம். நான் என் மனதிற்கு நேர்மையாகப் பட்டதின்படியே நடக்க வேண்டியவனுவேன்.

ஸ்ரீ ஜகத்குருவும் மற்றும் அவரைச் சார்ந்தவர்களும் எவ்வித ஆத்திரப்பட்டு என்னை எதிர்த்தாலும் சரி நான் என் மனச்சாட்சியின்படியே நடக்க வேண்டியவன். சனாதனிகள் தவறான வழியைப் பின்பற்றுகின்றனரென்று நான் கூறவரவில்லை. இதற்கு மாறாக அவர்கள் ஆழ்ந்த மதப்பற்றுதலும் வைதீக தர்மத்திலும் நடைமுறைகளிலும் எவ்வித மாறுதலும் கூடாதென்றும் தீவிர உணர்ச்சியுள்ளவர்களாவர். தற்போது சட்டமும், நீதிஸ்தலங்களும் தீண்டாமையை அங்கீகரித்து ஆதரித்து நிற்கின்றன. சனாதனிகளுக்கு எவ்வித திகைப்பை அளிப்பதாயிருப்பினும் சரி, அவ்வித சட்ட ஆதரவை அகற்றிவிட வேண்டுமென்றே நான் விரும்புகிறேன். சனாதனிகளின் எண்ணங்களுக்கு மாறான கருத்தை நான் கொண்டதற்காக, பிறர் தூண்டுதலின்படி நான் ஆடுகிறேனென்று அவர்கள் என்னைக் குறைகூறக் கூடாது. ஒவ்வொரு மனிதனுக்கும், அவரவர் மனச்சாட்சியே தெய்வமாகும். மிகவும் நீண்ட காலம் உறங்கிக் கிடந்த ஓர் சமூகத்தின் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு இழைத்து வந்த தீங்குகளை பொறுத்துவந்த ஓர் சமூகத்தின் மனச்சாட்சியை தட்டி எழுப்ப வேண்டுமென்பதே எனது விருப்பம். அவர்களை முன்னுக்குக் கொண்டுவர வேண்டுமென்ற ஆர்வம் கொண்டுள்ள எங்களுக்கு, சனாதனிகளின் மனதை புண்படுத்த வேண்டுமென்ற விருப்பம் சற்று மில்லை. சனாதனிகளையும் எங்களைச் சேர்ந்தவர்களென்றே நான் கூறுகிறேன். ஹிந்து மதத்திலுள்ள குழந்தை களனைவரையும் ஒன்று சேர்த்து ஹிந்துமதத்தை பலப்படுத்தி பழைய ஹிந்து சமூகத்தினிடையே புத்துயிரேற்படுமாறு செய்ய வேண்டுமென்பதே எங்கள் லட்சியமாகும். ஹிந்துக்கள் அழிந்து விடாதபடி செய்ய, ஹிந்துக்களை ஐக்யப்படுத்த ஸ்ரீ ஜகத்குரு உதவி யளிப்பாரென நான் நம்புகிறேன்.

# ஆசாரியாரும்—ஐயரும்.

## கோவில் பிரவேச விவகாரம்.

## சங்கராசாரியார் ஊர்வலம்.

### தண்டையார்பேட்டை சம்பவம்.

சென்னை, பிப்ரவரி, 2—

இன்றிரவு 10-30 மணிக்கு காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ. சங்கராசாரியார் ராயபுரத்தைவிட்டு திருவொற்றியூருக்குப் போகும் சமயத்தில்கொல்லவார் அக்ராகாரத்தில் தண்டையார்பேட்டை அவ்வூர் வாசிகள் 'தீண்டாமை ஒழிக' 'மகாத்மா காந்தி வாழ்க, சங்காச்சாரியே திரும்பிப்போ' என்று ஆரவாரம் செய்து ஆச்சாரியாரின் கோஷ்டியாருடன்வாக்குவாதம்செய்தனர். முடிவில், ஆச்சாரியார் தீண்டாமை, ஆலயப்பிரவேசம் முதலியவைகளுக்கு தந்தி கொடுத்தது ஆலயப்பிரவேசத்திற்கும் தீண்டாமைக்கும் விரோதமாயில்லை என்றும், பலியிடுவது மது மாமிசம் சாப்பிடுவது பிராமணர்கள் தவிர மற்ற மூன்று வர்ணத்தவர்களுக்கு நந்தது என்று ஆச்சாரியார் சொன்னது தப்பிதமென்றும், ஆச்சாரியாரின் கோஷ்டியார் சமாதானம் சொன்னார்கள். அதிக கூட்டம் சேர்ந்து விட்டது. பொதுஜனங்களில் பெரும் பகுதியினர் உடனே ஆச்சாரியார் அவர்கள் வாயாலேயே சமாதானம் சொல்லியாக வேண்டு மென்று வற்புறுத்திஆத்திரத்துடனும் ஆவேசத்துடனும்பல்லகைகிறுத்தமுற்பட்டதினால்,குழப்பமுண்டாகுமென அஞ்சி அங்கிருந்த சிலர் இரு கோஷ்டியையும் சாந்தப்படுத்தி அனுப்பிவிட்டார்கள்.

தமிழ்நாடு.

## கும்பகோணம் வைதீகர் விஷமம்.

### காங்கிரஸ் தொண்டருக்கு பிராயச்சித்தம்.

கும்பகோணம். பிப்ரவரி 4.

சில நாட்களுக்கு முன் ஆதி ஹிந்துக்களுக்கு தின்பண்டங்கள் வழங்கி அவர்களுடன் கலந்திருந்ததற்காக காங்கிரஸ் தொண்டர் ஸ்ரீ. சாரங்கபாணி அய்யங்காரை சமூக பகிஷ்காரம் செய்து அவருடைய வீட்டில் நடக்கும் சிரார்த்தம் முதலிய கர்மாக்களுக்கு வைதிகர்கள் வராமல் கட்டுப்பாடு செய்திருந்தனர்.

இன்று வைதிகர்கள் ஒன்றுகூடி அய்யங்கார் தெருவில் ஸ்ரீ. சாரங்கனுக்கு பிராயச்சித்தம் செய்து வைத்தார்கள்: பஞ்சகவ்யம், ம்ருத்து ஸ்நானம் முதலியவைகளால் தொண்டர் 'சுத்தம்' செய்யப்பட்டாராம்.

இனிமேல் இவருடைய தகப்பனாரின் வருஷ சிரார்த்தம் நடைபெறவேண்டியிருக்கிறது. விட்டுப்போன மாஸ்ய, சோதகும்பாதிகளும் நடைபெறும். பண்டிதர் பட்டு ஸ்வாமி இதை நடத்திவைத்தார். அனேக வைதிகர்கள் கூடியிருந்தார்கள்.

## மதுங்காவில் கூட்டம்.

பம்பாய், பிப். 6—

டில்லிக்குப் புறப்படுமுன் 'திரு. ராஜகோபாலாச்சாரியாரும், திரு. தேவிதாஸ் காந்தியும் மதுங்காவில் தென்னிந்தியர்களின் கூட்டமொன்றில் பிரசங்கம் செய்தனர். திரு. தேவிதாஸ் அவரது தென்னிந்தியப் பிரயாணத்தைப் பற்றி அறிவித்தார். வைதீகத்துக்கு ஒரு கோட்டை போன்ற தென்னிந்தியா மகாத்மாவின் உபவாசத்தால் ஆடிப்போயிருக்கிறது. உண்மையில் அங்கு விழிப்பு ஏற்பட்டிருப்பதோடு தீண்டாமையை வேர்கல்லி எறிய வேண்டுமென்றதொரு உணர்ச்சியும் ஏற்பட்டிருக்கிறது. தென்னிந்தியாவில் மிக்க ஊக்கத்துடன் வேலை செய்யக்கூடியவர்கள் பலரிருக்கின்றனர். ஆனால் தொடர்ந்தாற்போல் உதவி செய்துவர போதிய நிதியில்லை. ஆகவே, அவரவர்கள் தங்களாலான உதவியைச் செய்ய வேண்டும். தீண்டாமை விலக்கு வேலைக்காக அந்தப் பணத்தைத் தென்னிந்தியாவுக்குத் அனுப்ப வேண்டும்'' என்றார்.

திரு. ராஜகோபாலாச்சாரியார் அதன் பின் தமிழில் ஒரு பிரசங்கம் செய்தார். அவர் கூறியதாவது:— தீண்டாதாருக்காக புதிய கோயில்கள் கட்டிவிடுவதால் இந்தக் கஷ்டம் தீர்ந்து விடாது. புராதன கோயில்களுக்கிருக்கும் அந்தஸ்து அக்கோயில்களுக்கு ஏற்பட்டுவிடாது. இந்த விஷயத்தில் இக்கூட்டத்தினர் செய்யவேண்டிய முக்கிய ஊழியம் என்னவென்றால், தென்னிந்தியாவில் உள்ள அவர்களின் உற்றார் உறவினர்க்குத் தீண்டாதார் விஷயம் சமரஸ புத்தியுடன் நடந்து கொள்ளும்படி சொல்ல வேண்டியதேயாகும். தென்னிந்தியாவிலுள்ள பிராம்மணர்கள் இவ்விஷயத்தில் எவ்வளவு பரபரப்படைந்திருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். பம்பாயிலுள்ள தென்னிந்தியர்கள் தான் அங்குள்ள தங்கள் பெற்றோருக்கும் உறவினருக்கும் சொல்லி இந்த லக்ஷியம் நிறைவேற வழிதேட முடியும்' என்றார்.

## திரு. ராஜகோபாலாச்சாரியார் அறிக்கை.

டில்லிக்கு வந்துள்ள திரு. ஸி. ராஜகோபாலாச்சாரியார் வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் குறிப்பிட்டிருப்பதாவது:—

இந்தியா சட்டசபையில் தீண்டாமை விலக்கு சம்பந்தமாகவும் ஆலயப்பிரவேச சம்பந்தமாகவும் கொண்டுவரப்பட்டுள்ள மசோதாக்களிரண்டும் நிறைவேறுவதற்கு சபையிலுள்ள எல்லா கட்சியாருடைய ஆதரவையும் நாடுவதற்காகவே நாங்கள் இங்கு வந்திருக்கிறோம். முதலில் இரண்டு விஷயங்களைப் பரிசீலனை செய்ய வேண்டும். நமது மத விஷயங்களில் தலையிடும்படி கவர்னமெண்டாரைக் கேட்பது நியாயமா? காங்கிரஸ்காரர் என்று சொல்லிக் கொண்டு ஒத்துழையாமைக்காரர் ஒருவர் இவ்வித வேலையில் தலையிடுவது சரியா? என்ற இரண்டு கேள்விகள் இருக்கின்றன. முதல் கேள்விகளுக்குப் பலதடவைபதில் சொல்லியிருக்கிறேன். இருந்தாலும் மீண்டும் அதை திருப்பிச் சொல்லுகிறேன். வழக்கம் என்பது வளரவும் மாறவும் பிரிட்டிஷ் சட்டம் ஏற்படுத்தியுள்ள தடையை நீக்கவே இப்போது சட்டம் செய்யவேண்டுமென நாங்கள் கேட்கிறோம். உள்ள சட்டத்தைத் திருத்த வேண்டுமென்றே கோருகிறோம். இந்த வேலையை வேறுயாரேனும் ஊக்கத்துடன் செய்ய முற்பட்டால் ஒத்துழையாமைக்காரர்கள் விலகிநிற்கத் தயாராக விருக்கிறார்கள். நாட்டின் நன்மைக்கான திட்டமான சில விஷயங்களுக்காகவே ஒத்துழையாமை ஏற்பட்டிருக்கிறது. அபிவிருத்தியையும் சீர்திருத்தத்தையும் தடுக்க ஒத்துழையாமை ஏற்படவில்லை. இந்த வேலையில் நாங்கள் இறங்கிவிட்டதால் காங்கிரஸ் ஊக்கமெல்லாம் ஒரு வழியாக குன்றிவருவதாகவும் காங்கிரஸ்காரர் சிலர் அபிப்பிராயப் படுகின்றனர். எங்களுடைய நோக்கம் புனிதமாகவிருந்தாலும் கட்சி பலம் தேடுவதற்காக இதில் இறங்கவில்லையென்றாலும் காங்கிரஸின் லக்ஷியம் இதனால் பாதகமடையாது. காங்கிரசின் லக்ஷியம் இதனால் பலம் பெறும். எர்வாடா ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனையை நிறைவேற்றுவதே முக்கிய கடமையாகும்.

## பொறுக்கு மணிகள்.

உலகிலேயே சுமார் 7750 குண்டு மணியளவு ரேடியமே இருக்கிறது. இதன் விலை சுமார் 7500000 பொன் எனக்கூறுகிறார்கள்.

0 0 0

திருவாங்கூரில் ஆகாய விமானம் ஓட்டுவதில் முதன் முதலில் தேர்ச்சி பெற்றவர் திரு. ஜியார்ஜ் கொரியன் என்பவர் தான். தற்போது அவர் இலங்கைக்குப் போயிருக்கிறார்.

0 0 0

பிரிட்டனில் மட்டும் சுமார் 68 கிராம் ரேடியமிருக்கிறது. கானடாவில் புதிதாக ரேடியஞ் செய்ய ஒரு நவீன முறையைக் கைகொண்டிருக்கிறார்கள்.

0 0 0

சினிமா ஹாஸ்ய நடிகர் ஹெரால்டு லாயடின் வலதுமுழங்கைகிடையாது. ஒரு முறை சினிமா படம் பிடிக்குமிடத்திலேற்பட்ட வெடி மருந்து விபத்தால் அவர் முழங்கை முறிந்ததாகத் தெரிகிறது.

0 0 0

சினிமாவில் படம் பிடிக்கும்போது அகாரணமான தாமதமேற்படுமேயானால் அதனால் சினிமா கம்பெனிகாரருக்கு அதிக நஷ்டமேற்படுகிறது. நிமிஷத்திற்கு சுமார் 1 பொன் நஷ்டமேற்படுமெனக்கூறுகிறார்கள்.

0 0 0

மடபாஸாவிலிருக்கும் உகாண்டாப் பிரதேசத்து அரசர் அரண்மனையின் வாயிலில் ஒருபோதும் அணைந்து போகாத தீயொன்று எரிகின்றதாம். ஓர் அரசர் இறந்தால் தான் தீ அணைகின்றதாம்.

0 0 0

பேர்பெற்ற பிலியர்டு விளையாட்டுக்காரரான வால்டர் லின்ட்ரம் இடது கையால் பிலியர்டு விளையாடுகிறார். அவர் சிறுவயதாயிருக்கும்போது வலது கையின் முதல் விரலை இழந்ததே அவர் இடது கையால் விளையாடுவதற்குக் காரணமாகும்.

0 0 0

ஸ்ரீமதி மார்லின் டையட்ரிச் என்ற பிரபல சினிமா நடிகை பெண்களும் ஆண்களைப் போன்ற உடைதரித்துக் கொள்வது சிறப்பு என்று கூறிவருகின்றார். அன்றி ஆடவரைப் போலவே எப்போதும் ஆடையும் அணிந்துவருகின்றார்.

0 0 0

இலங்கையில் பெடிகாமா என்னும் இடத்தில் தேவநத்தன் என்னும் சிங்கள விவசாயி தான் குடியிருக்கும் வளைவில் ஒரு கிணறு தோண்டிய பொழுது ஆறடி ஆழத்தில் பல வர்ணக் களிமண் படை காணப்பட்டது. இம்மண் கட்டிடச் சுவர்களுக்கு வர்ண மிடுவதற்கும் உதவுமாம்.

0 0 0

ஜே. ஏ. வைட்வெட் என்பவர் தமக்குச் சொந்தமான 12 ஏக்கர் நிலத்தில் சுமார் 30,000 ஆரஞ்சுச் செடிகளை உற்பத்தி செய்து, செடி ஒன்று 10 ஷில்லிங் விதம் விற்பனை செய்து வந்தார். அவர் ஒரு வாரத்திற்குள் சுமார் 7000 செடிகளை விற்றுப் பணக்காரராகிவிட்டாராம்.

0 0 0

கலிபோர்னியாவில் சிலமரங்களின் உச்சிமீது ரயில்வண்டி ஓடிக்கொண்டிருக்கிறது. அங்கு கடற்கரையோரத்தில் ஆழமான ஓரிடமுண்டு. அங்கு கற்களாலோ, இரும்பாலோ பாலம் கட்டுவதற்கு அதிக செலவாகுமென யோசித்து, அந்த இடத்திற்குச் சமீபத்திலுள்ள மரக்கிளைகளை அறுத்துப் பாலம் கட்டியிருக்கிறார்கள். இந்தப்பாலம் சாதாரண இரும்புப்பாலத்தைவிட அதிக உறுதியாக விருக்கிறது.

## நம்மவர் ஆராய்ந்தறிவதற்கு இதுதான் சமயம்.

M. சின்னையா செட்டியார்.

VI

இதற்குமுன் கூறிய இரண்டு நிகழ்ச்சிகளிலும் நேர்ந்த கஷ்ட நஷ்டங்கள் யாவும் அதிகமான பிள்ளைகளைப் பெற்றதனாலும் ஆண்மகவில்லாக் குறையினாலும் நேர்ந்தன வென்று வைத்துக்கொள்ளுவோம். அப்படியில்லாமல் ஒரேமகனும் போதுமான பொருளும் மற்ற சௌகர்யங்களும் இருந்தும் விவாஹ விஷயத்திலுள்ள சீர்கேட்டினால் நேர்ந்த கஷ்டங்களைப் பற்றி இதிற் கூறுகிறேன்.

ஒரு குடும்பத்தில் தாய் தந்தையர் தேடி தபசிருந்து நெடுநாட் சென்று பெற்ற ஒரே மகன். வேறு பிள்ளைகளையில்லை. ஆகவே அருமையாக வளர்ந்திருப்பார்களென்று சொல்ல வேண்டியதில்லை. அருமையாக வளர்த்த பிள்ளைகள் வாத்தியாரைப் பயமுறுத்திப்படித்த பிள்ளைகள் அனேகமாக காரியத்துக்குதவாத பிள்ளைகளாகவும் விளையாட்டுப்பிள்ளைகளாகவும் கடைசிவரையிலிருந்துவிடுவது சகஜம். இவ்வருஷம் நான் சென்னைக்குப் போயிருந்தபோது இத்தகைய பிள்ளைகள் சிலரை கவனித்தேன். அவ்விளைஞர்கள் இந்தியர்களைப்போல உடுத்துவது கௌரவக்குறைவென்று எண்ணியோ என்னமோ காற்சட்டை மேற்சட்டை கழுத்துப்பட்டை, ஆட்ஸ், பூட்ஸ் இவற்றில் அதிக பிரேமையுள்ளவர்களாய்த் தங்களை அலங்கரித்துக்கொண்டு குனிந்தும் நிமிர்ந்தும் சரிக்கட்டிக்கொண்டு சிகரெட் பிடித்த வாயர்களாய் பீப்பிள்ஸ் பார்க்கிலும், பீச்சிலும், கிண்டி ரேசிலும், உயர்தர காபி ஹோட்டல்களிலும் காணப்பட்டனர். ஆனால் தேசம், பாஷை, வியாபாரம், தொழில் முதலிய விஷயங்களிலீடுபட்ட கூட்டங்களில் அவர்களை காணக்கிடைக்கவில்லை. மேல்நாட்டு அலங்கார மோக புருஷர்களாகிய அவர்கள் அந்த அழகை அழகு செய்வதற்கு கொஞ்சமாவது படித்துக்கொள்ளப்படாதா? கொஞ்சமாவது உலக விவகாரம் தெரிந்து கொள்ளப்படாதா? தங்கள் குடும்ப காரியங்களைப் பிறர் தயவின்றித் தாங்களே கவனித்துக்கொள்ளப் படாதா? சரக்கொன்றுமில்லாமற் சட்டையும் தொப்பியும் என்ன அழகு? இந்தியர்களாகிய நமக்குஇந்திய நடையுடையே பெருமை தருவதாகுமென்பதை அவர்களறியவேண்டும். நிற்க

நான் மேற்கூறிய பிள்ளை அப்படியில்லை அதிகப்படிப்பில்லாவிட்டாலும் தூரதேயங்கட்குப் போய் தொழில் துறையிலீடுபடாவிட்டாலும் வீணர் காரியம் வீணர் செலவு செய்து கெட்டபேர் எடுத்துக்கொள்ளவில்லை. நல்லபிள்ளையாகவே இருந்தார். இளம்பிராயத்தில்நல்லஇடத்திற்கல்யாணம் செய்யப்பெற்றார். ஒரு பெண் குழந்தை மட்டும் பிறந்திருந்தது. தாய்தந்தையரிருவரும் காலஞ்சென்றுவிட்டனர். வயது முப்பது ஆயிற்று. தந்தையார் தேடிவைத்து விட்டுப் போன பணம் அறுபதாயிர ரூபாய் ரொக்கமாக இருந்தது. பெண் பெரியவளாகிவிட்டாள். நல்ல சம்பந்தம் தேடினர். அப்படியே கிடைத்த தென்றாலும் இருபத்தையாயிர ரூபாய் செலவிட்டுச் செய்ய வேண்டிய தாயிற்று. மகளுக்குக் கல்யாணம் முடிந்ததும் மனைவி நோய்வாய்ப்பட்டு மாணமடைந்தாள். மறு மணம் செய்து கொள்ளவேண்டிய அவசியம் நேர்ந்துவிட்டது. மறுமணம் பணமில்லாமல் முடியக்கூடியதாக இல்லை. ஆகவே பாக்கியிருந்த எல்லாப் பணங்களையும் வழித்துத் துடைத்துக் கொடுத்துவிட்டு ஒரு பெண்ணைக் கொண்டார். அந்தப் பெண்ணும் புருஷனின் அருமை பெருமையறியாத இளம் பெண்ணாக இருந்தது. முப்பது வயது வரை யாதொரு கவலையுமில்லாமல் நிரம்ப சந்தோஷமாக வண்டி வாகனங்களும் ஏவலாட்களும் நல்ல உணவும் நல்ல சௌகரியமுமாக இருந்தவராதலால், வறுமையும் துன்பமும் அவரை வாட்டிவிட்டன. மனம் வருந்தி உடல் மெலிந்து மறுமணஞ் செய்து கொண்ட ஒரு வருஷத்தில் மாணமடைந்துவிட்டார். இந்தக்கதையினால் நம்மவரின் விவாஹ விஷயம் எவ்வளவு அபாயகாமானதாக இருக்கிறதென்பதும் மறுமணம் செய்து கொள்ளும் உரிமை பெண்களுக்குமிருந்தால் எவ்வளவு சௌகரியமாக இருந்திருக்குமென்பதும் நன்கு விளங்கும். எப்படி?

அறுபதாயிர ரூபாய் பணமுள்ள ஒருவர் இருபத்தையாயிர ரூபாய் செலவிட்டு ஒரு பெண்ணுக்குக் கல்யாணஞ் செய்ய வேண்டிய நிர்ப்பந்தமேற்படுவது நியாயமாகுமா? இல்லாதிருந்தால் நல்ல இடம் நல்ல மாப்பிள்ளை நல்ல சம்பந்தம் அமைவதாக இல்லையாம். ஏதோ கொஞ்சம் முன் பின்னாக இருந்தாலும் குற்றமில்லை யென்று செய்து விடலாமென்றால் ஒரே பெண்ணைப் பெற்று ஓவியமாக வளர்த்து ஊராரை யெல்லாம் பழித்து உத்தண்டமாகத் திரிந்த மனைவி சம்மதிக்கவில்லையாம். பெரிய இடம். தான் பிறந்த இடத்துக்கும் பெரிய இடந்தேடி அவள் பெண்கொடுக்க விரும்புவதும் இதுவரையில் ஒருவரும் வைக்காதமாதிரி சாமான் வைக்கவும் இதுவரை ஒருவரும் செய்யாதமாதிரி கல்யாணஞ் செய்யவும் அவள் ஆர்வங்கொள்வதுசகஜமன்றோ! அதுதான் இருபத்தையாயிரம் ரூபாய்களைச்செலவுசெய்வதற்குக் காரணமாயிற்று. புருஷன்டம்பத்துக்குஆசைப்படவில்லை. பெருஞ்செலவு செய்ய விரும்பவில்லை. தன் நிலைமையை உணராமலில்லை. ஆனால் சமூகத்தின் போக்கும், விபரீதமான பழக்க வழக்கங்களும், மனைவியின் அறியாமையால் உண்டான நிர்ப்பந்தமும் அவரை குனியவைத்து விட்டன. கல்வி யறிவில்லாதவர்களும் கிணற்றுத்தவளைகளைப் போல் குறுகிய திருஷ்டியுள்ளவர்களும் மூடநம்பிக்கை யுள்ளவர்களுமான பெண்களின் புத்தியும் போக்கும் செயலும் பல சமயங்களில் நல்லனவாக முடிவதில்லை. அதுதான் போகட்டும். அந்த ஆடம்பரப் பிரியமுள்ளமனைவி போய்விட்டாளே, தாரமிழந்த அவர் ஒரு புருஷனையிழந்த பெண்ணை மணந்துகொள்ளக் கூடுமானால் அது எவ்வளவு சுலபமான காரியமாக இருக்கும். அப்படி வழக்கமுள்ள சமூகமாக இருந்தால் அவர் நிச்சயமாக அப்படியே செய்து கொண்டிருப்பார். கையிலுள்ளவை மடியிலுள்ளவை யெல்லாம் ஒரு பெண்ணுக்காக அதுவும் அருமை யறியாத சிறு பெண்ணுக்காக இழந்து வருந்த மாட்டார். சமூகம் அந்த ஏற்பாட்டை யேற்றுக்கொள்ள மறுப்பதால் வீட்டைத் துடைத்துக் கொடுத்துத் தலையை முழுகிவிட்டு ஒரு வழியுமில்லாமல் வெறும் ஆளாக மனம் நொந்து மாண்டுபோனார்! அவர் தான் மாண்டுபோனாரென்றால் அவர் பெயரால் ஒரு இளம் பெண் ஆயுள்பரியந்தம் சிறைத்தண்டனை யடைந்து வருந்துவதா? இதுதான் நமது சமூகக் கட்டுப்பாட்டின் சிறப்பு! இதைத்தான் நம்மவர் பல்லைக்கடித்துக் கொண்டு பாதுகாத்து வருகின்றனர்! இதிற்றான் ஜாதிமரியாதைகள் யாவும் புதைந்து கிடக்கின்றன வென்கின்றனர். பெருஞ்சூதுக் களத்திற் கூட இரண்டு ஆட்டத்தில் அறுபதாயிர ரூபாய் நஷ்டம் வராது. தீவர்த்திக் கொள்ளைக்காரர் கூட ஒரு வீட்டிலுள்ள பொருள்கள் எல்லாவற்றையும் கொண்டு போவதில்லை. இவ்விரண்டு பெரிய அபாயங்களிலும் பெரிய அபாயமான காரியமாக நம்மவர் விவாஹ விஷயமிருக்கிறது? இன்னும் சில நிகழ்ச்சிகளை அடுத்த அத்தியாயத்திற் கூறுகிறேன்.

## விகடத் துணுக்குகள்.

ஆசிரியர்:—ஜில்லா போர்டு தலைவர் என்றால் பொருளென்ன?

மாணவன்:—தனவந்தனர் அல்லது பணத்தை விரயம் செய்பவர் என்பது பொருள்.

0 0 0

அமெரிக்காவுக்குப் புதிதாகப் போன ஒருவர் ஒரு வீட்டின் கதவில் அடியில் வருமாறு எழுதியிருக்கக் கண்டார்:—

திருடர்கள் ஜாக்கிரதை இந்தக்கதவை தொட்டால் உடன்— அது மின்சாரத்தால் வேலை செய்வதாகையினால் போலீசார் தோன்றுவார்கள்.

மறு நாள் அவர் அவ்வழியே சென்றபோது அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது:—

வீட்டுச் சொந்தக்காரரே வணக்கம் நீர் கதவின் இரகசியத்தைக் கூறிவிட்டதால் நாங்கள் சுவரை உடைத்து உள்ளே புகுந்தோம்.

—திருடர்கள்.

0 0 0

புதல்வனின் படிப்பைப் பரிசோதிக்க நினைத்த தந்தை "என்விழி" என்று எழுதும்படிச் சொன்னார். புதல்வன் 'விலி' என்றெழுதினான். உடன் தந்தை:—அடே விழிகத என்டா குண்டு 'லி' யைப் போட்டாய்?

புதல்வன்:—கண் குண்டு கண்ணுப் தெரிந்தது அப்பா; ஆதலால் குண்டு லி யைப் போட்டேன்.

0 0 0

ஆசிரியர்:—கோபாலா, உன் கட்டுரை மிகவும் நன்றாயிருக்கிறது; ஆனால் கிருஷ்ணனுடைய கட்டுரைக்கு மிதற்கும் வித்தியாசமில்லை. ஆகவே நான் என்ன நினைக்க வேண்டும்?

மாணவன்:—அதுவும் நன்றாயிருக்கின்றதென்று நினைக்க வேண்டும்.

0 0 0

தந்தையார்:—எனக்குத் தூக்கமே வருகின்றதில்லை. என்ன செய்வதென்றும் தெரியவில்லை.

தாய்:—ஏதேனும் டாக்டரை அழைத்துக் கேட்போமே?

மகன்:—டாக்டர் வேண்டாமம்மா. எனக்குத் தெரியுமொரு நல்லவழி.

தாய் அது என்ன வழி?

மகன்:—ஒரு நாள்தான் தூக்கம் வரவில்லையென்றால் நன்னூலை யெடுத்துப் படிக்கச் சொல். இரண்டு தினங்கள் தூக்கம் வரவில்லையானால் தொல்காப்பியத்தை எடுத்து வாசிக்கச் சொல். உடன் நோய் வாசியாகிவிடும்.

0 0 0

ஒருவன்:—அவர் பாட்டு நல்ல வழியல்லவா?

மற்றொருவன்:—ஆம். நல்ல வழியென்றாலும் போதுமா? நன்றாக சாலை போட்டு செப்பனிடப்பட்டதுமன்றி அதற்குப்பல இடைவழிகளுமிருக்கின்றன.





## உலக வியாபார மந்தம்.

### அதனை தீர்க்கும் வழி.

உலக வியாபார மந்தத்தை தீர்ப்பதற்கான வழிகளைப்பற்றி ஸர் ராபர்ட் ஹாரன் டண்டியில் பிரஸங்கம் செய்கையில் பின் வருமாறு கூறினார்:—

விலைவாசிகள் உயரவேண்டியது மிகவும் அவசியமாகும். மாக்மில்லன் கமிட்டி கூறுகிறபடி சரக்குகளின் மொத்த விலை வாசிகளை உயர்த்த வேண்டியதே கவர்ன்மெண்டின் நோக்கமாகும். பிரிட்டிஷ் கவர்ன்மெண்டு அது விஷயமாக அனுஸரிக்கும் கொள்கையானது மிகவும் புத்திசாலித்தனமானது. விலை வாசிகள் உயர்வதால் செலவுகளும் லாபமும் அதிகமாகிறது. விலைவாசிகள் இறங்கிவிட்டால் லாபங்கிடைக்காமல் செலவுக்குச் சரியாக வருமானமும் கிடைப்பதில்லை. பணமுதல் முழுவதும் உபயோகிக்கப்பட்டுவிட்டது. வியாபாரம் நின்று விட்டது. வேலையில்லாக் கஷ்டமேற்பட்டு விட்டது. ஆனால் விலை வாசிகள் உயர்வது வேறு விஷயங்களில் சார்ந்திருக்கிறது. விற்பனைச்சரக்குகள் கடனாக அனுப்பப்பட வேண்டும். அவ்விதம் அனுப்புவதற்கு நம்பிக்கையிருக்கவேண்டும். உலகத்திலுள்ள பற்பல தேசங்கள் சிக்கலான விஷயங்களைத்தீர்ப்பதால் இந்த நம்பிக்கை யேற்படவேண்டும். சிக்கலான விஷயங்களில் யுத்தக்கடன் பிரச்னையும்ஒன்றாகும்.

யுத்தக்கடன் நிலைமையில் அவநம்பிக்கைக்கு ஏராளமாக விடமிருந்தபோதிலும் அமெரிக்காவின் புதியத்தலைவர் காங்கிரஸ் சபையின் அபிப்பிராயத்தை மாற்றி எல்லா அமெரிக்க பாங்கர்களும் பொருளாதார நிபுணர்களும் கருதுவது போல் யுத்தக்கடன் தவணைகளை மிகவும் குறைத்தால் அமெரிக்காவுக்கே நலனேற்படுமென்று காங்கிரஸ் கருதுமாறு செய்யலாமென்று நம்பப்படுகிறது.

காப்பு வரிகளாலும் பண உதவியாலும் வியாபாரத்துக்கு விசேஷப் பாதகமேற்பட்டு தேசங்களுள் சரக்குகள் கைமாறுவது கேவலமான ஸ்திதிக்கு வந்துவிட்டதென்று தற்காலம் உணரப்பட்டு வந்திருக்கிறது.

இந்தத் தடைகளைத் தீர்ப்பது பல சிக்கல்களை உண்டாக்குகிறது. இவ்விஷயங்களில் எல்லா தேசங்களும் சீக்கிரமாக ஒன்றுபட்ட அபிப்பிராயத்துக்கு வருமென்று எண்ணுவது அதிக நம்பிக்கை வெளியிடுவது போல் காணலாம். இருந்தபோதினும் தற்கால நெருக்கடியின் தீவிரத்தால் ஒரு சரியான வழி யேற்படலாம்.

## இந்திய துணி அபிவிருத்தி.

லண்டனில் ஜனவரி மாதம் 23௳ நடைபெற்ற கூட்டத்தில் திரு. ஆர். டபிள்யூ. பிராக் என்பவர் இந்தியா துணி இறக்குமதி செய்வதை இன்னும் பத்து வருஷகாலத்தில் அடியோடு நிறுத்தி விடுமென்றும் இந்தியர் உபயோகிக்கும் ஒவ்வொரு நான்கு கஜத்துணியிலும் மூன்று கஜங்கள் சுதேச ஆலைகளாலும் எஞ்சியுள்ள ஒரு கஜத்தில் அரை கஜம் ஜப்பானாலும் சப்ளை செய்யப்படுவதாகும். இம்மாறுதலுக்கு அரசியல் மாச்சர்யத்தைவிட இந்திய ஆலைத்தொழிலின் விரைவான முன்னேற்றமே காரணமாகுமென்றும், இந்தியாவின் தங்கம் மறைவிடங்களிலிருந்துவெளியாகி ஏற்றுமதி செய்யப்படும் சந்தர்ப்பங்களைக் கொண்டு இந்தியாவில் எவ்வளவு கஷ்டமிருக்கிறதென்று தெரிவதாகவும் உலக வியாபார அபிவிருத்தியால் தான் இக்கஷ்டங்கள் தீருமென்றும்சொன்னார்.

## திரு. கேசவன் நாயரின் உண்ணாவிரதம் முடிந்தது.

ஜனவரி மாதம் 4-ந்தேதி முதல் உண்ணாவிரதமிருந்து வரும் திரு பி. கேசவன் நாயர் பெப் 3ந்தேதி உபவாசத்தை விட்டு விட்டதாகவும் ஸ்ரீமான் கேலப்பனிட மிருந்துவந்த ஒரு கடிதத்தை அநுசரித்து இவ்விதம் செய்ததாகவும் செய்தி எட்டுகிறது. ஜெயில் சூப்பரிண்டின் யோசனைப்படி ஜனவரி 30-ந் தேதி முதல் ஸ்ரீமான் கேசவன் நாயர் உண்ணாவிரதத்தை நிறுத்தியதாக ஜெயில் சூப்பரிண்டினிடமிருந்து சர்க்காருக்குத் தகவல் வந்திருக்கிறது.

## உத்ஸவ ஸங்கீத இன்பம்.

அம்பாள்புரம் அழகிய கிராமம். அம்பாள்புரத்திற்கு மீனாட்சி அம்மன் கோவில்தான் பிரதானமாக விருக்கிறது. அம்மனுக்கு பிரதி வருடத்திலும் வைகாசி மாதத்தில் பிரம்மோத்ஸவம் நிகழ்வதுண்டு. ஆறும் நாள்மிக விசேடம் பொருந்தியது என்பது ஆஸ்திகர்களின் கொள்கை. எனவே அன்று நடக்கும் காக்ஷிகளைக் காண நான் சில நண்பர்களுடன் சென்றிருந்தேன். கூடி இருந்த கூட்டத்தோடு நாங்களும் கலந்து கொண்டோம். இவ்வருடம் சதிர் (பரதநாட்டியம்) இல்லாததால் ஜனக்கூட்டம் ஒன்றுக்குப்பாதிதான் எனப் பலர் பேசிக் கொண்டனர். இரவு சுமார் 11-30 மணிக்கு அம்மனுக்கு அலங்காரம் செய்தாயிற்று. 12 மணிக்குதீப ஆராதனைகள் நடந்தன. கூட்டம் ஆராதனை நடந்த விடத்திற்கு முன் புறத்திலும் பின்புறத்திலும் நின்றுகொண்டிருந்ததெனினும் ஆராதனையின்போது அம்பிகையைச் சேவித்துக் கொண்டவர் நூற்றில் ஒருவர்தானிருக்கலாம்.

தாசிகள் நடனம் இல்லாமைக்காக இப்போதிருக்கும் கூட்டத்தைப் போலுள்ள ஜனங்கள் வரவில்லை என்றால் வந்திருக்கும் கூட்டம் அம்மன் தெரிசனார்த்தம் வந்ததெனச் சொல்ல முடியாதிருக்கிற நிலையில் எதைக் குறித்து வந்ததென யோசிப்பார்களல்லவா?

ஆராதனை முடிந்த சிறிது நேரத்தில் கூட்டம் ஒரேயடியாய் நெருக்கித் தள்ளிக்கொண்டு அம்மனுக்கு முன்புறம் நோக்கி ஒடிற்று. என்னவென்றறிய நானும் நண்பர்களும் கூட்டம் போய் நின்ற இடத்தை நோக்கிப்போனேம். உத்ஸவ காலங்களில் கொரளி வித்தைக்காரன், ஜால வித்தைக்காரன, படம் காட்டுவோன், இவர்கள் தங்கள் தங்கள் தொழிலைச்செய்து காட்டி பணம் சம்பாதிப்பது வாடிக்கையல்லவா? புது மாதிரியான வித்தைக்காரன் வந்திருக்கலாமென நாங்கள் எண்ணினேம். ஆனால் ஏமாற்றமடைந்தோம். கூட்டத்தின் நடுவில் "மேளக்காரர்கள்" நின்று கொண்டிருந்தனர். விசாரித்தபோது அவர்கள் மிகக்கீர்த்தி வாய்ந்தவர்களென்றும் பெருந்தொகை கொடுத்துவரவழைத்திருப்பதாகவும் அதற்காகத்தான் அவ்வளவு ஜனக்கூட்டம் என்றும் தெரிந்தது. இதற்குள் அம்பிகையும் ரிஷப வாகனத்தின் மீது ஆரோகணித்து அவ்விடம் வந்து சேர்ந்தாள். நாகஸ்வரக்காரர் இருவரும் அம்பிகையைச் சேவித்துக்கொண்டும் தங்கள் கருவிகளைக்கண்களில் ஒற்றிக்கொண்டும் வாசிக்கத் தொடங்கி நாட்டை ராகத்தைப் பல பல விதமாக ஆலாபனை செய்துவிட்டு அடுத்தாற்போல் வேறு ராகம் வாசிக்க ஆரம்பிக்கும் போது குதூகலத்துடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தது. பைரவி ராகம் ஊதுவதற்கு பீ. பீ. பீ. என்றார்கள். உடனே போ போ போ. என்ற சத்தம் செவிகளைத்தாக்கிற்று திடுக்கிட்டுப்போனேம். சத்தம் வந்த திக்கை நோக்கினேம். மீனாட்சி அம்மன் கோவில் தர்மகர்த்தா "ஹும் ஹும் நடங்கள் நடங்கள்" என்றுகத்திக்கொண்டே அம்மன் ஆரோகணித்திருந்த வாகனம் சுமப்பவர்களைச் செல்ல அனுமதித்தார் ஜனக்கூட்டமும்நாகஸ்வரக் கோஷ்டியும் அடுத்த தெருவில் போய்கின்றது. நாகஸ்வரக்காரர்கள் பைரவி ராகத்தைத் தொடங்கினார்கள். எனக்கு ஸங்கீத ஞானம் கொஞ்சம் உண்டு என்றுதான்நினைக்கிறேன். இல்லாதிருந்தால் பாடல்களைக் கேட்கும் போதோவாத்தியங்களைக் கேட்கும் போதோ புளகாங்கிதம் ஏற்படுமா? எங்கு என்ன ஜாமா நடந்தாலும் நான் மட்டும் ஆப்ஸென்டானதே இல்லை. அநேக நாளாய் சங்கீத உலகில் சுற்றித்திரிந்த தன் காரணமாகப் போதிய அநுபவம் ஏற்பட்டது. நாகஸ்வரக் காரர்களிலொருவர் பைரவி ராகத்தை மிக இனிமையாக வாசித்துக் கொண்டிருந்தார். வெகு ஆனந்தமாயிருந்தது. ஜனங்களின் வேண்டுகோட் கிணங்கி ஆலாபனையை ஒருவாறாக முடித்துவிட்டு தியாகராஜ கிருதியில் "ஸ்ரீரெகுவரசுகுணலயா" என்ற கீர்த்தனையைத் தொடங்கி முறையே பல்லவி, அனுபல்லவி வாசித்து விட்டு அனுபல்லவிக்கு சிட்டாஸ்வரம் வாசிக்க ஆரம்பித்தார். "தாததா தபம—தாரானலேனி, நீநிநிதபம-தாரானலேனி ஸாஸ ஸநி.......என்ற போது மறுபடியும் போ போ என்ற தர்மகர்த்தாவின் குரல் கேட்டது. ஜனக்கூட்டத்திற்கு ஏற்பட்ட ஆத்திரத்திற்கு அளவில்லை. எனக்கும் கோபந்தான்வந்தது. ஆனால் உடனே நான் இலவசமாய்ச் சங்கீதம் கேட்கிறேனென்றும் பணம் கொடுக்கும் அதிகாரி உத்தரவிடுவதை யார் தடுக்க முடியும்? ஞாபகப்படுத்திக் கொண்டேன். ஜனக்கூட்டம் அஃதோடு கலைந்துவிட்டது. நாங்களும் வீடு சேர்ந்தோம். டிரஸ்டியின் செயலை நீங்கள் வெறுப்பதாயிருந்தால் அது தவறுதலாகும். இம்மாதிரிசந்தர்ப்பங்களில் நாகஸ்வரக் காரர்கள் ஒரு ராகத்தையோ ஒரு பல்லவியையோ, ஒரு கீர்த்தனையையோ வாசித்தால் அது முடிந்ததும் தாங்களாகவே அவ்விடத்தை விட்டு அடுத்த வீதிக்குச் சென்று வாசிக்கத் தொடங்குவது வழக்கம். ஆகவே தான் முடியும்வரை காத்திருந்து தமது அதிகாரத்தை உபயோகிக்கும் சந்தர்ப்பத்தை இழந்துவிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டுவதாயிற்று. இவ்வளவு பெருந்தொகை கொடுத்துவரவழைத்ததற்கு இந்த அதிகாரத்தையாவது செலுத்த வேண்டாமா? கடைசியாக நீங்கள் தர்மகர்த்தா சங்கீதஞான மற்றவரென்று தானே சொல்லுவீர்கள். அதைப்பற்றி நீங்கள் எப்படி அபிப்பிராயப்பட்ட போதிலும் கனம் தர்மகர்த்தா மாத்திரம் தமது முறைகளை மாற்றிக் கொள்ளப் போவதில்லை.

"சங்கீதப்பிரியன்"

## அரசர் கல்யாணமும் அணிகள் - தோற்றமும்.

பாட்டியாலா மகாராஜாவின் புதல்வரின் கல்யாணத்திற்காக 4 கோடிக்கு மேற் பொறுமானமுள்ள நகைகளை இந்தியாவில் பல பாகங்களிலுமுள்ள நகை வியாபாரிகள் கொண்டு வந்தனர். மகாராஜா நான்கு ஐந்து லட்சம் பெறுமானமுள்ள நகைகளையே வாங்கினர்.

## பைத்தியக்கார மாப்பிளை.

அகமதாபாதில் 14 வயதான ஒரு சிறுவன் 14 வயதான ஒரு பெண்ணை மணம் செய்யப் போகின்றானென்ற செய்தியைக்கேட்டு அவ்வூர் சுசார் சுதார சமாஜத்தார் மேற்படி மணமகன் பைத்தியக்காரனென்றும் கோர்ட்டில் மனுப்போட்டு உத்தரவு வாங்கியிருக்கிறார்கள்.

## சென்னை சட்டசபை உப தேர்தல்.

ஸ்ரீமான் ஆர். என். ஆரோக்கியசாமி முதலியார் காலகதி யடைந்ததால் சென்னை சட்டசபையில் ஏற்பட்ட காலி ஸ்தானத்தைப் பூர்த்தி செய்ய நடக்க விருக்கும் உப தேர்தலில் ஒரு அபேக்ஷகராக விருக்க ஸ்ரீமான் ஜார்ஜ் ஜோஸப் உத்தேசித்திருக்கிறார்.

## மாணவனின் காதற் கதை.

16 வயதான ஒரு பெண்ணை அவளுடைய தந்தை வீட்டிலிருந்து அழைத்துச் சென்று விட்டதற்காக 18 வயதான ஒரு மாணவன் பாட்னா ஹைகோர்ட்டாரால் ஆறுமாதம் தண்டனை விதிக்கப்பட்டான்.

அம்மாணவனின் பெயர் ராமன்; அப்பெண்ணின் பெயர் உதாசி, இருவருக்கும் காதலேற்பட்டுப் பல கடிதங்களை அனுப்பி இருந்தார்கள். ஒரு நாளிரவு அப்பெண் வீட்டைவிட்டு வெளியே வந்தாள். அப்போது வாலிபன் தோன்றி அவளை பக்கத்திலுள்ள சிறுகாட்டுக்கு இட்டுச் சென்று இரண்டுமணி நேரம் அங்கு வைத்திருந்தான். அப்பால் பல விடங்கட்கு இருவரும் சென்றுகடைசியாக மத்தியமாகாணத்திலுள்ள வாலிபனின் பாட்டி வீட்டுக்குச் சென்றனர். அங்கு போலீசார் கைது செய்தார்கள்.

இவ்வாறு இருவரும் சென்றது இருவருடையவும் சம்மதத்தின் பேரில் தானெனினும் சிறுமி வயதுவராதவளாகையினால் மெஜாரட்டி யடைந்த வாலிபன் தண்டிக்கப்பட்டான்.

## நடிகை சுலோசனவுக்கு மணமில்லை.

மிஸ் ரூபி மேயேர்ஸ் என்ற மிஸ் சுலோசனவுக்கும் ஷெயிக் இப்டாகர் ரசூல் என்பவருக்கும் சமீபத்தில் மணம் நடைபெறுமென்ற செய்தி தவறான தென்று தெரிகிறது. ஷெயிக் இப்டாகர் ரசூல் உடல் நோயுற்றிருக்கிறார். அன்றி இந்திய கானம் என்ற பேசும் சினிமாவுக்காக அமெரிக்காவுக்கும் செல்லப்போகிறார்.

## தந்தைக்குப் பல மணங்கள். புதல்விகட்கு மணமில்லை.

டான்டாரன் என்றவிடத்திலுள்ள 70 வயதான வொரு தனவந்தர் 11 வயதான ஒருசிறுமியைஇப்போதுகல்யாணம்செய்து கொண்டிருக்கிறார். அவரது முதல்மனைவி உயிருடனிருக்கிறார். அவருக்கு 4 புதல்விகளிருக்கின்றனர். மூத்த பெண்ணுக்கு வயது இருபது. அப்பெண்களில் ஒருவருக்காவது மணமாகவில்லை.

## குழந்தைமணப் போர்.

லக்ஷ்மணபுரியிலுள்ள ஆர்ய சமாஜத் தொண்டர்கள் குழந்தை மணத்தை அழிப்பதென்று கங்கணம்கட்டிக்கொண்டிருக்கிறார்கள். சாரதாசட்டத்தை மீறி கல்யாணம் செய்ய முயல்வோருக்கு எச்சரிக்கை நோட்டீஸ் கொடுக்கின்றார்கள். அதனை கவனிக்க வில்லையானால் "பிராசிக்கூட்" செய்யமுயற்சிகிறார்கள்.

## லண்டன்-பூனா ரேடியோ டெலிபோன்.

### ராஜப்பிரதிநிதிக்கும் பிரதம மந்திரிக்கும் சம்பாஷணைகள் நடக்கும்.

லண்டனுக்கும் பூனாவுக்கும் இருபுறமிருந்தும் ரேடியோ டெலிபோன் மூலம் சம்பாஷணைகள் நடந்துவருகின்றன. இந்த ரேடியோ டெலிபோன் ஸர்வீஸ் சில தினங்களுள் ராஜப்பிரதிநிதி பிரதம மந்திரி சம்பாஷணை மூலம் ஆரம்பித்து வைக்கப்படுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆரம்பத்தில் பம்பாய்வரையில் சம்பாஷணைகள் நடக்கும். அதன் பிறகு கல்கத்தாவுடனும் இது சம்பந்தப்படுத்தப்படும். பிறகு இந்தியாவின் பல பாகங்களும் சேர்க்கப்படும். யுனைடெட் ஸ்டேட்ஸ், மெக்சிகோ, கூபா, ஆஸ்திரேலியா, ஆர்ஜன்டினா, சிலி, பிரேஜீல், நியூஜிலாந்து, தென் ஆப்பிரிக்கா, எகிப்து, கானடா ஆகிய தேசங்கள் லண்டனுடன் ரேடியோ டெலிபோன் மூலம் சம்பந்தப்பட்டிருக்கின்றன.

## ரூஸ்வெல்டு திட்டம். காப்புவரிகளைக் குறைக்க ஆலோசனை.

மிஸ்டர் ரூஸ்வெல்டும் ஸெனேட்டர் ஹல்லும் உலகப்பொருளாதார திட்டமொன்றை விவரத்துடன் தயாரித்திருக்கிறார்கள். யுத்தக் கடன் ரத்துக்குப் பதிலாக உலகக் கரன்ஸியை ஸ்திரப்படுத்தவும், எல்லா தேசங்களிலும் காப்புவரிகளைக் குறைக்கவும் திட்டத்தில் ஆலோசனை கூறப்பட்டிருக்கிறது.

# ஆலயப் பிரவேச மசோதா.

## மகாத்மாவின் கருத்து.

## ராஜப் பிரதிநிதிக்கு மகாத்மாஜீயின் கடிதம்.

புனு, பிப், 3—

அஸோஸியேடட் பிரஸ் நிருபர் மகாத்மாவைப் பேட்டிகண்டு பேசியபோது அவர் கூறியதாவது.—திரு. ரங்கய்யர் இந்தியா சட்டசபையில் கொண்டுவரப்போவதாக அறிவித்த 2-வது மசோதா டாக்டர் சுப்பராயன் மசோதாவின் நகல் என்றே சொல்லலாம். அதற்கு இராஜப் பிரதிநிதி அநுமதி கொடுத்தது எனக்குச் சந்தோஷத்தைத் தருகிறது. இரண்டு மசோதாக்களையும் இந்தியா சட்டசபை உடனே ஆலோசனைக் கெடுத்துக்கொள்ள போதிய வசதிகள் செய்யப்படுமென்றே நான் நம்பியிருக்கிறேன். இம்மசோதாக்கள் தனிப்பட்ட ஒரு அங்கத்தினரால் கொண்டுவரப்பட்ட தெனினும், இந்தியாவிலுள்ள பலருக்கும் இவை முக்கியமானதாக விருக்கின்றன. இவை ஜீவகாருண்யத் தன்மையுடையதாக விருப்பதால் உலகத்திற்கே முக்கியமானதாகவு மிருக்கின்றன. இவற்றிற்கு விரோதமாக எவ்வளவு சொன்னாலும் இந்தியா சட்டசபை அங்கத்தினர்கள் இவை எவருடைய மதத்திலும் குறுக்கிடுவதாகவில்லை யென்பதை உணருவார்கள் என்றே நான் நம்பியிருக்கின்றேன். கவர்ன்மெண்டு மத சம்பந்தமாக நடுநிலைமை வகிக்கவேண்டியோனல இந்த மசோதாக்கள் அத்யாவசியமாகும். அபிவிருத்திக்கான வழியில் உள்ள தடைகளை நிவர்த்திப்பதற்காக இவை கொண்டு வரப்பட்டிருக்கின்றனவே யன்றி ஒருவரையும் பலவந்தப்படுத்துவதற்காகவோ அன்றி மத சம்பந்தமாக வழக்கத்தை மாற்றுவதற்காகவோ கொண்டுவரப்படவில்லை.

இந்தக் கூட்டத்திலேயே இம்மசோதாக்கள் கொண்டுவரப்பட்டுவிடுமோ என்ற விஷயமாகச் சந்தேகம் ஏற்பட்டதால் பிரபலஸ்தர்களோடு இதைப்பற்றி நான் தகவல் விசாரித்து வருகிறேன். இந்தியா சட்டசபை அங்கத்தினர்களாக விருந்தவர்கள் அறிவிக்கும் தகவலின்படி மசோதாக்களிரண்டையும் இந்த கூட்டத்திலேயே கொண்டுவரச் சாத்திய மிருப்பதாகவும். அங்கத்தினர்கள் விரும்பினால் அவற்றைச் சட்டமாகவும் செய்துவிடலாமென்றும் தெரிந்தது. இந்த கூட்டத்தில் இம்மசோதாக்களைக் கொண்டுவர நியாயமான வசதிகளைச் செய்து கொடுக்கக் கவர்ன்மெண்டால் முடியும். அங்கத்தினர்களும் இதைக் கவனிக்கவேண்டும்.

மசோதாக்களிரண்டைப் பற்றியும் பொதுஜன அபிப்பிராயம் அறிய அவற்றைச் சுற்றறிக்கை மூலம் அனுப்பவேண்டுமென ஒரு உத்தேசமிருப்பதாகத் தெரிகிறது. ஆனால் இம்மசோதாக்களில் அடங்கியுள்ள விஷயம் புதிதல்லவாதலாலும் தெரிந்து கொள்ளக்கூடாத விஷயங்கள் ஒன்றும் மசோதாக்களில் இல்லையாதலாலும் அவ்வித முறை அநுஷ்டிக்கப்படுமென நான் நம்பவில்லை. இவை சம்பந்தமாகத் தனிப்பட்டவர்களின் அபிப்பிராயமும் பற்பல ஸ்தாபனங்களின் அபிப்பிராயமும் நன்கு தெரிந்திருக்கிறது. ஆகவே மசோதாக்களைச் சுற்றறிக்கை மூலம் அனுப்புவதென்பது காலங்கடத்தும் வேலையென்பதே எனதபிப்பிராயம்.

### இனிசெய்யவேண்டிய வேலை.

திரு. பிர்லாவும் திரு. ராஜகோபாலாச்சாரியாரும் என்னோடு பேசுகையில் இராஜப் பிரதிநிதியின் அனுமதியைப்பற்றி அவர்கள் மனதில் பட்டதைக்கூறினர். என் அபிப்பிராயத்தையும் அவர்களின் அபிப்பிராயங்களையும் ஒப்பிட்டுப் பார்த்தோம். பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்டவேண்டிய முயற்சிகளைப்பற்றியும் யோசித்தோம். உண்மையான சநாதனிகளிடம் அவர்களுக்கும் எங்களுக்கும் முக்கியவழி யாதுமில்லையென்றும், மதப்பழக்க வழக்கங்களை அடியோடு மாற்றிவிடவோ சாஸ்திரங்களைப் புறக்கணிக்கவோ நாங்கள் விரும்பவில்லை யென்பதை எடுத்துச் செல்ல வேண்டுமென்றும் முடிவு செய்தோம். சீர்திருத்தக்காரர்களின் அபிப்பிராயத்தை உண்மையில் சநாதனிகள் அறியாமையால்தான் இந்தக் கிளர்ச்சி நடந்து வருகிறது. எல்லாவற்றிற்கும் மூல காரணம் சந்தேகம்தான். ஆகவே இந்தச்சந்தேகத்தை அகற்ற தீண்டாமை விலக்குப்பிரசார வேலை மும்முரமாக நடக்க வேண்டுமென்ற முடிவுக்கு வந்தோம். வீண்வாதம் மட்டும் செய்துகொண்டிருக்காமல் தெளிவாகப் பிரச்னைகளை எடுத்துச்சொல்லும்படி ஊழியர்களுக்குச் சொல்லவேண்டும்.

### இராஜப் பிரதிநிதிக்குக் கடிதம்.

பம்பாய். பிப் 2—

ஆலயப்பிரவேச மசோதாக்களைப்பற்றி காந்திஜி இராஜப்பிரதிநிதிக்குக் கடிதம் எழுதியிருப்பதாகத் தெரிகிறது. இது சம்பந்தமாக இப்போது முதன் முதலாக காந்திஜி ராஜப்பிரதிநிதிக்கு கடிதம் எழுதியிருக்கிறார். இதுவரை அவர் ஜாதி ஹிந்துக்களுக்கு விண்ணப்பம் விடுத்து வந்தார். வழக்கப்படி காந்திஜி "என் அருமை நண்பருக்கு" என ஆரம்பித்திருக்கிறார்.

இந்தியா சட்ட சபையில் பிரஸ்தாப மசோதாக்களிரண்டைக்கொண்டுவர திரு ரங்கய்யருக்கு அனுமதி கொடுத்ததுபற்றி மகாத்மா இராஜப்பிரதிநிதிக்கு வந்தனம் செலுத்துகிறார். சென்னை சட்டசபையில் டாக்டர் சுப்பராயன் கொண்டுவர விரும்பிய மசோதாவை அச்சபையில் ஆலோசிக்க அனுமதி கொடுத்திருந்தால் நன்மை அதிகமாக ஏற்பட்டிருக்குமென்று அபிப்பிராயப்பட்டிருக்கிறார். தீண்டாமை விலக்கு இயக்கத்தில் ஆலயப்பிரவேசவிஷயம் முதன்மையாக விளங்குகிறது. குருவாயூர் பிரச்னை சம்பந்தமாக பொதுஜன வாக்கெடுக்கப்பட்ட மாகாணத்தில் பொதுஜன அபிப்பிராயத்துக்கேற்ப ஆலயப்பிரவேச உரிமையளிக்கும் அந்த மசோதாவுக்கு அனுமதி கொடுத்திருந்தால் இந்தியா சட்டசபையில் மசோதாக்கள் கொண்டுவருவதைவிட சீர்திருத்த வேலைக்குச்சாதகமாக விருந்திருக்கும். இந்தியா சட்ட சபையில் கவர்ன்மெண்டு வேலை நெருக்கடியில் தனிப்பட்டவர்களால் கொண்டுவரப்படும் இத்தகைய மசோதாக்கள் நிறைவேற்றுவதென்றால் சற்று கஷ்டம்தான். கவர்ன்மெண்டார் அநுஷ்டித்துள்ள முடிவைக் கவனிக்கையில் ஹிந்துமதம் பிறர் உதவியை எதிர்பாராது முன்னேற்றமடைய வேண்டுமென அவர்கள் அறைகூறுவதாகத் தெரிகிறது. குருவாயூர் மட்டிலிருந்த பிரச்னை இப்போதுஇந்தியாவெங்கும் பரவியிருக்கிறது.கவர்ன்மெண்டார் இது சம்பந்தமாக அறைகூவி அழைத்திருப்பதை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். எர்வாடா ஒப்பந்தத்தில் திட்டமாகஹரிஜனங்களுக்கு ஜாதி ஹிந்துக்கள் அளித்துள்ள வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காகவே இந்த ஆலயப்பிரவேச இயக்கத்தைச்சரிவரநடத்திமுடிக்க வேண்டுமென நான் விரும்புகிறேன். இந்த வாக்குறுதியை நிறைவேற்ற பிரிட்டிஷ் டிரஸ்ட் சட்டம் ஒருதடையாக இருப்பதாகச் சிறந்த வக்கீல்கள் மூலம் நான் தெரிந்துகொண்டேன்.கவர்ன்மெண்டார் இந்த இரண்டு மசோதாக்களையும் நிறைவேற்றி அந்தத்தடையை நீக்கவேண்டும். அல்லது வேறுவழியாவது தேடவேண்டும். எர்வாடா ஒப்பந்தத்தை கவர்ன்மெண்டார் ஏற்றுக்கொண்டதால் அவர்கள் சமூக மத சீர்திருத்தத்துக்கு உறுதிகூறிய தலைவர்களின் பிரதிநிதித்துவத் தன்மையையும் ஒப்புக்கொண்டதாகிறது. ஆகவே அந்த ஒப்பந்தத்தில் அடங்கிய உறுதிமொழி நிறைவேற இடையில் உள்ள சட்டத் தடைகளை யெல்லாம் நீக்குவது கவர்ன்மெண்டின் கடமையாகும்.

அந்த வாக்குறுதி தாமதமின்றி தக்க காலத்தில் நிறைவேற்றப்படுவதற்கு நான் என் உயிரையே ஒரு பிணையாக வைத்திருப்பதால் அளவுகடந்து அது விஷயத்தில் தாமதம் செய்தால் எனக்குச் சகிக்கவொண்ணா துன்பம் நேரும். இந்த மசோதாக்கள் சம்பந்தப்பட்ட பிரச்னை பத்திரிகைகளிலும் கூட்டங்களிலும் விசேஷமாக விவாதிக்கப் பட்டிருப்பதால் மீண்டும் பொதுஜன அபிப்பிராயத்தை அறியஅவற்றைச் சுற்றறிக்கை மூலம் அனுப்புவதென்பது அநாவசியம் என்று அவர் அக்கடிதத்தில் குறிப்பிட்டிருப்பதாகத் தெரிகிறது. புதன்கிழமை மாலை அவர் இக்கடிதத்தை எழுதியிருக்கிறார். தீர்க்கமாக ஆலோசித்துப் பின் கடைசியாக இராஜப்பிரதிநிதிக்கு கடிதம் எழுதுவதென்ற முடிவுக்கு வந்தார். செவ்வாய்க் கிழமையன்று மாலை பிரார்த்தனைக்குப் பிறகு அவர் இக்கடிதத்தைத் தயாரித்தார்.

### ஆத்தங்குடியில் தீண்டாமை விலக்கு.

சென்ற ஞாயிற்றுக்கிழமையன்று மாலை 8 மணிக்கு மேல் ஆத்தங்குடி ஊருணிக்கு மேல்புறம் காரைக்குடி டாக்டர் சுப்பிரமணிய அய்யர் தலைமையில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. அதில் திருவாளர்களான இ. சிவம், ஜகதீச ஐயர் ஆகியோர் தீண்டாமை விலக்கு, ஜாதிபேத மொழித்தல் ஆகிய விஷயம்பற்றி பிரசங்கம் செய்தார்கள். வைதீகர்களும் இதரர்களுமாக சுமார் 500 பேருக்கு மேல் கூடியிருந்தனர். கூட்டம் 8-மணி முதல் 10-45 வரையிலும் நடைபெற்றது. இறுதியில் தலைவருடைய முடிவுரையுடன் கூட்டம் கலைந்தது. (ஒரு நிருபர்.)



## நோட்டீஸ்.

கும்பகோணம் சப் கோர்ட்டு 1931ஞ O. S. 49-க்கு
தேவகோட்டை சப் கோர்ட்டு 1932ஞ E. P. நெ 221

கும்பகோணம் ராணி ரெங்கப்பர் & சன்ஸ். } வாதி.

கண்டனூர் அண்ணாமலை செட்டியார் மகன், ராமநாதன் செட்டியார். } 2-ம் பிரதிவாதி.

இந்த நெம்பரில் ஷை பிரதிவாதி கொடுக்கவேண்டிய டிகிரி கடனுக்கு ஷையாருக்கு பாத்தியமான கண்டனூர் நிலத்திலுள்ள வீடு தோட்டம் வகையறா 1 முதல் 6 வரை லெக்க சொத்துக்களில் ஷை பிரதிவாதிக்குள்ள 1/4 பாகத்தை ஏலத்துக்கு கொண்டுவந்து 13-3-33உ ஏலவாயிதாயேற்பட்டிருப்பதில் ஷை தேதியில் யாரும்ஏலத்தில் கேழ்க்க இஷ்டமுள்ளவர்கள் தேவகோட்டை சப்கோர்ட்டில் ஏலத்தில் கேழ்க்கலாமென்றவிபரம் இதன்மூலம்தெரிவித்திருக்கிறது

S. K. நாகசாமி அய்யர்,
அட்வகேட்,
30-1-33. தேவகோட்டை.



சிறுகதைப்பகுதி.

# தங்கப் பல் சுப்பைய்யா.

எஸ். சி.

எனது சொந்தவூர் தாழையூற்று. தாழையூற்று திருநெல்வேலிக்கு சமீபமிருக்கிறது. அது ஒரு "பட்டிக்காடே"யாயினும் தாமிரவர்ணி சம்பந்தத்தால் நலன் பல பெற்றிருக்கிறதென்பது வெளிப்படை. ஏராளமாக கம்பு, கேப்பை, சோளம், துவரைமுதலியனவளரும் புஞ்சைநிலங்களும் நஞ்சைவயல்களுமுண்டு. சமீபத்தில்சிலர் எடுத்துக்கொண்டிருக்கிற முயற்சியால் ஏராளமாக மாமரங்களும் வளரத்தொடங்கியிருக்கின்றன. காய்கறிகட்கு எட்டுணையும் பஞ்சம். கோரதாழையூற்று ஒரு கிராம மாயினும் மிகவும் நல்லவூர் என்பதில்ஐயமில்லை. பட்டணவாசம் நல்லதா கிராமவாசம் நல்லதா வென்று வாதம் புரிபவர் சில காலம் தாழையூற்றில் வந்து தங்கிப் போனால்—ஒருவாறு திருநெல்வேலி சம்பந்தத்தையும் பார்த்திருப்பாரானால்—கிராம வாசமே சிறந்ததுஎன்று கூறிவிடுவார்கள்.

இந்தவூரில் என்குடும்பம் பரம்பரையாகப் பேரும் புகழும் பெற்று விளங்கிக்கொண்டிருந்தது. நான் கதை ஆரம்பிக்கின்றபோது என் குடும்பத்திற்கு நானே தலைவனாயிருந்தேன். அப்போது எனக்கு வயது 26. அந்தக்காலம் வரையிலும் எனக்கு மணமாகவில்லை. அதிகமான ஆஸ்தியிருந்தாலும், நானே குடும்பத்தலைவனாகவிருந்தாலும் 26 வயது வரையிலும் கல்யாணமாகாமலிருப்பது விந்தையல்லவா! ஆம் அதன் காரணம் வருமாறு:-

என் தந்தையார் பெரியவீட்டு மனிதர் என்ற அளவில் கொஞ்சம் பெருமையாக நடத்தப்பட்டாரென்றாலும் மகாதுஷ்டர். அவர் ஆற்றியிருக்கும் கொடுஞ் செயல்களே என்னையும் பிறரால் வெறுக்கச் செய்கின்றது.

என் தாயார் ஒருநாள் ஏதோ ஒரு சிறு குற்றம் செய்தாளாம். புருஷன் பெண்ணென்றிருந்தால் குற்றங்கள் நிகழாமலாவிருக்கும்? என் தந்தையால் அதனைப்பொறுக்கமுடியவில்லை. உடனே மூன்றுமாதம் 'ஸஸ்பெண்டு' செய்து பிறந்த வீட்டுக்கனுப்பிவிட்டார். இந்த மூன்று மாதமும் கடந்தும் தாயார் திரும்பிவரவில்லை. புருஷன் வந்து அழைத்துப்போனால் தானே பெண்போவது நமது நாட்டு வழக்கம்? ஆனால் என் தந்தையின் வாதம் அதல்ல. அவர் "மூன்றுமாதம் சஸ்பெண்டு செய்து அந்தக் காலவரையறை தீர்ந்துவிட்டால் ஏன் மீண்டும் வேலைக் காஜராக லாகாது" என்று சொல்லலானார். சொன்ன தோடமையாது ஒருநாள் தன் மாமனார் வீட்டுக்குச் சென்று பல சுற்றத்தார்களின் முன்பு என் தாயை நன்றாக புளியங்குச்சினால் புடைத்தார். என்றாய் கொஞ்சநேரம் பொறுத்திருந்து விட்டு அப்பால் சகிக்க முடியாதென்று கண்டபோது பயந்துஓடத்தொடங்கினாள். இதனைக் கண்டதும் என் தகப்பனார் அதிகமாகக் கோபம் கொண்டு தன்னோடு கொண்டு போயிருந்த வேட்டைநாயைஏவிக்கடிக்கச்செய்தார். எஜமானனிடம் பற்றுடைய தாகிய அந்நாய் தான் செய்வது தவறென்றறியாது என் தாயை நன்றாகக் கடித்துப் புண்படுத்தி விட்டது. இந்தக் கொடுமையைப் பலர் பார்த்திருந்தும் ஒருவரேனும் தடைசெய்யமுற்படவில்லை. ஏனெனில் ஒரு பெண் ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டு விட்டால் அவள் அவனுடைய முழுஉடமை யென்பது கிராமாந்தர ஜனங்களின் கருத்தாம்.

எங்ஙனமாயினும், உதையாலும் நாயினாலும் புண்படுத்தப்பட்ட என்றாய் வீட்டுக்கு வந்தாள். அதுமுதல் சுமார் ஆறுமாதம் வரையிலும் தலைதூக்கவே யில்லை. கொடுமையான பல வியாதிகளால் உழன்று இறுதியில் உயிர்துறந்தாள். இந்த செய்தி உண்மையில் கொடுமையானதல்லவா! இதனைக் கேட்டால் மனித இருதயம் படைத்த எவராலும் வாளாவிருக்க முடியுமா? என் சொந்தவூர் வாசிகள் என் குடும்பத்தில் உள்ளோர வெறுப்புக்காட்டினார்களென்றால் அது முற்றிலும் சரியான தென்பதே பொருள்.

இந்தக் கதையின் காரணமாகத் தான் பலர் எனக்கும் பெண் கொடுக்க மறுத்தனர். இது சிலருக்கு ஒருவாறு சரியென்ற தோன்றினாலும் தந்தை செய்த பிழைக்குத் தனையனென்ன பொறுப்பு என்பது விளங்கவில்லை.

நான் பற்பல குடும்பங்களில்பெண் விசாரித்தேன். ஒருவரும் இணங்கவில்லை. என் தாய்தந்தையர் இறந்து போய்விட்டபடியால் ஒரு மாமனைத் தவிர என் கல்யாணத்தில் ஊக்கமெடுத்துக் கொள்வாரெவருமில்லை.

0 0 0

தாழையூற்றில் மங்கம்மாள் என்ற ஒரு பெண்ணிருந்தாள். நம்கதை தொடங்கும் போது அவளுக்கு சற்றேறக்குறைய இருபது வயதிருக்கலாம். அவள் சிறுசக்காலம் பாளையங்கோட்டை கிருஸ்தவப் பள்ளிக்கூடத்தில் கல்விகற்று வந்ததாலும் பட்டண சம்பந்தம் அதிகம் பெற்றிருந்ததாலும் நாகரிகமாகத் தோற்றினாள், அன்றிஇயற்கையாகவே அழகும் இருந்தது. அவளை பிரமாதமாக நான் வருணிக்க முன்வரவில்லை; என்றாலும் ஒத்தசரீரமும் உருண்டு திரண்டிருந்த அங்கங்களும் எந்தப் புருஷனும் ஒரு பார்வைபார்த்து விட்டுப் போகத் தகுந்த வசீகரமும் தோற்றமும் பெற்றிருந்தாளென்று மட்டிலும் கூறிக்கொள்கின்றேன். மேலும் தாழையூற்றில் அவளைப் போல் ஒரு கட்டழகியில்லை. நான் அவ்வூரில் பணத்தாலும் வெளிப்படையான செல்வாக்கினாலும் எவ்வளவு மேம்பட்டிருந்தேனோ அவ்வளவு அவளும் அழகாலும் கல்வியறிவாலும் மேம்பட்டிருந்தாள். இந்த நிலையில் நாங்களிருவரும் ஒத்து வாழ்தலன்றோ சிறப்புடையது? அறிவும் அழகும் ஆஸ்தியையும் அந்தஸ்தையும் அணுகவில்லையானால் பொருந்துமா? எனவே நான் மங்கம்மாளை விரும்பியது முற்றிலும் சரியான தன்றோ!

நான் என்னென்ன வழிகளிலெல்லாமோ என் காதலைத் தெரிவித்துக் கொள்ள முயன்றேன். மங்கம்மாள் இணங்கவில்லை. அவள் கோவிலுக்குப் போகும் போதெல்லாம் பின்னடிப் போய்வந்தேன். தண்ணீர் எடுக்கப் போனபோதெல்லாம் நானும்கேணிக்குப் போவது போல் போய்வந்தேன். வழியில் நடக்கும் போதெல்லாம் ஜாடை ஜாடையாகப் பார்த்து வந்தேன். தனிமையாக வழியில் சந்தித்து விட்டால் புன்முறுவல் தூகி வந்தேன்—ஒருநாள் வெருண்டோடி வந்த ஒரு எருதை அவளை நோக்கித் துரத்திவிட்டு அப்பால்அவளைக் காப்பாற்ற முயல்வதுபோல முன் பாய்ந்துஎருதைத் துரத்தினேன். இங்ஙனம் நான் கற்ற வித்தைகளையெல்லாம் கையாடிப்பார்த்தும் பயன்படவில்லை. மங்கம்மாள் தினைத்துணையாவது என்மீது காதலோ, சிநேகமோ-இரக்கம் கூடகாட்டவில்லை--அவளுடைய கெண்டையங்கண்கள் ஒருநாளாவது என்மீது சாய்க்கப்படவில்லை. ஒருநாளாவது அவளது புன்முறுவல் பாணம் என்னை நோக்கி எய்யப்படவுமில்லை. ஆதலால் என் மனம் மிக மிகப்புண்பட்டது; என்றாலும் அவளது அழகிய பிரதிபிம்பம் மட்டிலும் என்மனதை விட்டு அகலவில்லை.

இங்ஙனம் சிலமாதங்கள்செல்லவே ஒருநாள் நான் தீவிரமாகமங்கம்மாளை அடைவதற்கான வழிகளைக் கண்டுபிடிக்க யோசிக்க லானேன் பல பல எண்ணங்கள் வந்து வந்து போயின. கடைசியில் ஒரு எண்ணம் நிலைத்திருந்தது. உடன் நான் தாழையூற்றில் ஓர் பிரபல போக்கிரியும் எனது நண்பனும் ஆனால் என்மீது மிகுந்த பக்திகாட்டுகின்றவனுமாகிய ஆளவந்தானுக்கு ஆளனுப்பினேன். என் பெயரைக்கேட்ட அளவிலேயே அவன் வந்தான். இருவரும் என்னவோ சனைப்பற்றிப்பேசிக்கொண்டோம் இறுதியாக நான் சொன்னதாவது:—தருணத்தை நான் குறிப்பிடுவேன்; உடன் வந்துவிடு. எவருக்கும் தெரியாமல் பதுங்கி இருப்பதில் கண்ணும் கருத்துமாயிருந்து கொள்வேன். நீ மங்கம்மாளைக்கண்டதும் அவள் மீது பாய்ந்து தொல்லை செய்வது மாதிரி காட்டு. ஆனால்உண்மையில் அவமதிப்புச்செய்யாதே. நான் ஓடிவந்துஉன்னை உதைத்துத்தள்ளி அவளுக்காக உன்னோடு போராடுவேன். நீ கொஞ்ச நேரம் சண்டைபோட்டுவிட்டு ஓடிப் போய்விடு. அப்பால் நான் பார்த்துக் கொள்கிறேன். ஒரு பெண்ணை அழிவிலிருந்து காப்பாற்றினால் அவள் காப்பாற்றியவனுக்குத்தானே சொந்தம்? இந்தத்தடவை மங்கம்மாளை எப்படியும் கைப்பற்றிக்கொள்வேன். ஆளவந்தான் உஷார்—கவனமாயிரு- விஷயம் எவருக்கும் தெரியலாகாது.

என்றேன். அவன் சம்பூர்ணமாக ஒத்துக்கொண்டு விட்டான்.

தாழையூற்றுப்போன்ற விடங்களில் என் திட்டத்தை நிறைவேற்றி விடுவது சுலபம். ஏனெனில் தனிமையாகப் பெண்கள் நஞ்சைபுஞ்சைகட்குப் போவது சர்வசாதாரணம். மேலும் பெண்கட்குப் புருஷர்களால் ஒரு தொல்லை ஏற்பட்டதென்பதும் கார்த்திகைப் பிறையே.

இப்படியிருக்க, ஒருநாள் மாலையில் சுமார் 5-30க்கு மங்கம்மாள் தன் வீட்டிலிருந்து ஒருபர்லாங்கு தூரத்திலிருக்கும் ஒரு மாந்தோட்டத்தில் மெதுவாக உலாவிக் கொண்டு நின்றாள். அங்கு மாமரங்கள் பல தொக்கி வளர்ந்திருப்பதால் மாலை வேளையில் ஒரு பெரிய சிங்காரப் பூஞ்சோலை போல் மிளிர்ந்தது. அதில் பொன்னிற சூரிய கிரணங்கள் பரவியதால் இலைகள் பளபள வென்று மின்னின. ஆகாயம் சிவந்திலங்கிய அக்காட்சி அம்மாந் தோட்டத்திற்கு ஓர் ரமணியமான தோற்றத்தை நல்கியது. இரவில் அங்கு தங்கி இருக்கும் பறவை இனங்கள் பல மரத்துக்கு மரம் கிளைக்குக் கிளை தாவி விளையாடிக் கொண்டிருந்தன. மங்கம்மாள் இவற்றைக் கண்ணுற்றுக் கொண்டே தனிமையில் மெதுவாயுலாவிக் கொண்டிருந்தாள். கவலையற்று மாலைப்போதில் லயமாயிருந்த அவளது இருதயம் மகிழ்ச்சியால் நிறைந்திருந்ததால் வாயிலிருந்து ஒரு இனிய பாரதியார் கீதம் வெளிவந்து கொண்டிருந்தது. கைகள் சிலபூக்களைப் பிடுங்கி சரமகட்டிக் கொண்டிருந்தன. அப்போது நான் மெதுவாக அங்கு வந்து ஒரு வேலியண்டையொதுங்கி நின்றேன். ஆ! மங்கம்மாள் எவ்வாறு என்னுள்ளத்தைக் கொள்ளை கொண்டாள்! நிர்மலமான அவளது வதனமும், தோற்றமும் பாட்டும் எவ்வளவு இனிமையாய்த் தோற்றின! அவள் அப்போது அடைந்திருந்த மனோற்சாகத்தைத் தான் என்னென்று சொல்வேன்! அந்த அழகிய பூங்காவின் அரசி யென்று சொன்னாலும் தகுமே. கதைகளில் நாம் படிக்கின்ற வனதேவதைகளும் மோஹினிகளும் கூட அவளுக்கிணையாகுமோ!! ஆ!இத்தகைய ஒரு பருவ மங்கையோடு, அழகியோடு, குயில்கள் குடிகொள்ளும் அத்தகைய மாந்தோட்டத்தில் ஓடியாடிக் கூடிக் குலாவிப் பாடிப்படித்துக் களித்துப் பொழுதுபோக்குவதன்றோபோனசுதம்; வாழ்க்கையின் முடிவு!

ஆ! அத்தகைய பொழுது எப்போது வருமென்று ஏங்கிக்கொண்டே ஒரு வேலிமறைவில் உட்கார்ந்துகொண்டு, என்மானம், மரியாதை, குலம், கோத்திரம எல்லாவற்றையும் விட்டு விட்டு இடையிடையே ஒணான் (காட்டான்) மாதிரி எட்டி எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தேன். அப்போது நான் ஏற்கெனவே அறிவித்திருந்தபடி ஆளவந்தான் ஆளடையாளம் தெரியாதபடி வர்ணத்தைத் தேய்த்து உடம்பை மறைத்துக்கொண்டு அங்கு தோன்றினான். அவன் என்னைக் காணவில்லையாயினும் நான் தகுந்த தருணத்தில் வந்துவிடுவே னென்றெண்ணி மெதுவாக தோட்டத்துக்குள் குதித்து மாங்களைப் பார்ப்பவன் போல மெல்ல மெல்ல போகலானான். கொஞ்சநேரமாக மங்கம்மாள் அவனைக்காணவில்லை. கடைசியில் மங்கம்மாள், திடீரென ஒருவன் தன் பக்கத்தில் வருவதைக் கண்டதும் திடுக்கிட்டு வெறுப்போடு அவனை நோக்கிவிட்டு விரைந்து போகப்பார்த்தாள். ஆனால் ஆளவந்தாள் விடாமல் முன்னால் சென்று "அடீ! ரதியே! இப்படிப்பட்ட ஒரு அழகிய சோலையில் ஒரு நல்ல பொழுதில், வள்ளி தினைப் புனத்தில் ஆலோலம்செய்தாற்போல தனிமையாக நின்றுகொண்டிருக்கின்றாயே! உன் பருவகாலத்தைப் பாழாக்கிலென்ன பலன்?என் வல்லிபோல் ஒரு தந்த சுப்பிரமணியரோடு ஒன்றி இன்பம் நுகரலாகாதா? என்னமுதே! இதோ சுப்பிரமணியனைப்போல நான், வனவேடனைப்போல, உன்னை ஆளவந்திருக்கின்றேன். என்மானே! தேனே!" என்று கூறிக்கொண்டு"காயாதகானகத்தே நின்றுலாவும் நற்காரிகையே" என்றசுப்ரமணியபாகவதர் பாட்டைப்பாடத் தொடங்கினார். அப்போது தான் மங்கம்மாளுக்குத்தான் ஆபத்தில் சிக்கிக்கொண்டாலென்பது தெரிந்தது. எனவே அவள் வேடன் கணையேற்ற மான்பேடுபோல் அவதிப்பட்டு, கலங்கி, குழம்பி, பயந்து, அஞ்சி அங்குமிங்கும் ஓடலானாள். "ஐயோ! திருடன், திருடன்" என்று கத்தவும் செய்தாள். ஆனால் மாங்கனடர்ந்த சோலையில் கத்தினால் வெளியில் சத்தம் கேட்கவாசெய்யும்,அவள் மேலும் மேலும் சத்தமிட்டுக்கொண்டு தோட்டத்துக்கு வெளியே ஓட முயன்றாள். ஆளவந்தான் விடாது அங்கு மிங்கும் பாய்ந்து வழிமறித்துத்தாரத்திக் கொண்டே நின்றான். இத்தருணம் நோக்கி நான் "அடே! யாரடா அங்கு அட்டூழியம் செய்கிறது? இதுவரையிலும் இந்த வூரிலேயே செய்யப்பட்டிராத செயலை செய்பவன் யாவன்?" என்று கூறிக்கொண்டே ஒரேபாய்ச்சலாகபாய்ந்துசென்று "ஆ! என்னருமை மங்காய்! நீயா, உன்னை யானிருக்கும்போது ஒருவன் மானபங்கம் செய்யப் பார்ப்பது". என்று முழங்கி ஆளவந்தானை அணுகினேன். அப்போது அவனை தப்புவிக்கின்ற முறையில் "அடே! நீ காரைக்கிணறுக் குறச்சுப்பையா அல்லவா! குறவனுமிப்படிச்செய்யுங்காலம்

(12 ம் பக்கம் பார்க்க)

## நகரத்தார் உபசாரம்.

### திரு. க. வீ. அழ. ராமநாதன் செட்டியாருக்குப் பாராட்டு.

[நமது நிருபர்-]

கோட்டையூர் திருவாளர் க. வீ. அழ. ராமநாதன் செட்டியாரவர்கள் திருப்பத்தூர் தாலூகா போர்டின் தலைவராக போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டதைப் பாராட்டும் பொருட்டு, கோட்டையூர் நகரத்தார்கள் 5-2-33ந்தேதி மாலை AK. RM. MK. மெய்யப்ப செட்டியாரவர்களுடைய வீட்டில் ஓர் சிற்றுண்டி விருந்து நடத்தினார்கள். அப்போது நடைபெற்ற கூட்டத்திற்கு திவான் பகதூர் முருகப்ப செட்டியாரவர்கள் தலைமை தாங்கினார்கள். பல ஊர்களிலிருந்தும் சுமார் 500 பேர்கட்கு மேலாக வந்திருந்தார்கள். அவர்களில் சிலர்:-

வைபவம் ஆரம்பிக்கு முன்பு நகரப்பிரமுகர்கள் திரு. ராமநாதன் செட்டியாரவர்களையும் திவான்பகதூர் முருகப்ப செட்டியாரவர்களேயும் பாண்டு முழங்க ஊர்வலமாக திரு. ராமநாதன் செட்டியாரின் வீட்டிலிருந்து அழைத்துக் கொண்டு வந்தார்கள். ஊர்வலத்திற்காக இரண்டு யானைகள் வரவழைக்கப் பட்டிருந்தன. ஊர்வலம் சரியாக 4-15-க்கு வைபவம் நடந்த விடத்துக்கு வந்து சேர்ந்தது. அவ்விடம் பற்பல செடி கொடிகளாலும் காவணத்தினாலும் மின்சார விளக்குகளினாலும் பொலியுற்றுத் தோற்றிற்று.

எல்லோரும் தகுந்த ஆசனங்களில் அமர்ந்ததும், ராவ்பகதூர் வீரப்பசெட்டியாரவர்கள் கூட்டத்தில் தலைமைவகிக்கும் பொருட்டு கனம் அழ. மு. முருகப்ப செட்டியார் பெயரை பிரேரபணை செய்தார். அதனை திரு. A. K. A. C. T. சிதம்பரம் செட்டியாரவர்கள் ஆமோதித்தார்கள். அப்பால் தலைவரும் பிரதம விருந்தினர் திரு. ராமநாதன் செட்டியாரவர்களும் தத்தம ஆசனங்களில் உட்கார்ந்ததும் இருவருக்கும் முறையே திரு. க. வீ. சொ. வீ. அழகப்ப செட்டியாரும் திரு. மு. தெ. ம. தேனப்ப செட்டியார். (கோட்டையூர் பஞ்சாயத்துப் போர்டு தலைவர்) அவர்களும் உயர்ந்த ஜரிகைமாலை அணிவித்தார்கள்.

பின் தலைவரவர்கள் அடியில் வருமாறு பேசினர்:—

இச்சிறப்பான வைபவத்துக்கு என்னைத் தலைமை வகிக்கும்படி விரும்பிய நகரத்தார் அவர்களுக்கு எனது வந்தனத்தைச் செலுத்துகின்றேன். நமது நண்பர், திரு. க. வீ. அள. ராம. ராமநாதன் செட்டியார் அவர்களை நம் ராஜதானியில் அறியாதார் மிகச்சிலர். அவர்கள், கீர்த்திவாய்ந்த செல்வமிருந்த, பிரசித்தபெற்ற குடும்பத்தில் ஜனித்தவராவர் அவர்கள் நமது திருப்பத்தூர் தாலூகா போர்டு பிரஸிடெண்டாக, ஏகமனத்துடன் தெரிந்தெடுக்கப் பெற்றிருப்பதால் நம்மெல்லோருக்கும் ஏற்பட்டுள்ள மகிழ்ச்சியைத் தெரிவிக்கவும் அவர்களைப்பாராட்டி பொது ஸ்தாபனங்களில் ஈடுபட்டு உழைக்க வேண்டி அவர்களை உற்சாகப்படுத்தவுமே நாம் இங்கு கூடியிருக்கிறோம்.

சிலர் இம்மாதிரி விஷயங்களுக்கு உபசார விருந்து வைத்து செலவு செய்வானேன் என்று வினவுகின்றனர். இது அர்த்தமல்லாத கேள்வியாகும். மனித வாழ்க்கையில் சந்தோஷம் ஏற்பட்டாலும், சலனமேற்பட்டாலும் அவைகளைத் தனதாகப்பாவித்துக் கூடிக்கலந்து வாழ்வதே மானிடவர்க்கத்தின் கொள்கையாகும். மேலும் பொதுஜன நன்மைக்கு உழைக்கும் ஒருவரைப்பாராட்டி உற்சாகப்படுத்த வேண்டியது ஒவ்வொருவரின் கடமையன்றோ?

நம்மவர்கள் பொதுஜன விஷயங்களில் தீவிரமாக ஈடுபடாமல் சற்று ஒதுங்கி நின்று வந்தனர். இப்போது காலதேச வர்த்தமானங்களுக்கிணங்க "காலத்தோடொத்து வாழ்" என்னும் முதுமொழிப்படி நம்மவர்கள் பொதுஜன வாழ்வில் கூடிக்கலந்து கொள்ள வேண்டு மென்பதை உணர்ந்து பல நாடுகளிலும் ஜனசமூக முன்னேற்ற விஷயங்களில் ஈடுபட்டுச் சேவை செய்ய முன்வருகின்றார்கள். இது நம் சமூக முன்னேற்றத்துக்கு அறிகுறியாகும். நமது இராமநாதபுரம் ஜில்லாவில் நமது மரபினர் சம்பந்தப்பட்ட திருப்பத்தூர், திருவாடானை சிவகெங்கை, மூன்று தாலூக்காக்களிலும் தாலூக்கா போர்டின் தலைமை ஸ்தானத்திற்கு அந்தந்த தாலூக்காவில் முக்கியமானவர்கள் தேர்ந்தெடுக்கப் பெற்றிருப்பது மிக சந்தோஷிக்கத்தக்கதாகும். நமது தேசத்தில் எங்கு பார்த்தாலும் ஒற்றுமை, ஒற்றுமை யென்று ஜனத்தலைவர்கள் விரும்புகிறார்கள். நாட்டில் ஒற்றுமையைக் கோரும நாம முதல் முதலாக எக்காரியத்திலும் நமது பரம்பரையான வகுப்பு ஒற்றுமையைத் தேடிக் கொள்ள வேண்டும். வகுப்பின் ஒற்றுமையே நாட்டின் ஒற்றுமைக்கு அஸ்திவாரமாகும். சமீபத்தில் நடைபெற்ற நமது தாலூக்கா லோக்கல் போர்டு தேர்தல்களில் நம்மவர்கள் காட்டிய ஒற்றுமைக்கு நான் அவர்களைப் பாராட்டுகிறேன். இவ்வொற்றுமையை நாம் வசக் கொள்ளல் வேண்டும். எந்த ஸ்தல ஸ்தாபன நிர்வாகம் சரிவர நடைபெறவேண்டுமானாலும் தலைவருக்கும் சகோதர மெம்பர்களுக்கும் அந்யோந்யமான ஒத்துழைப்பு இன்றியமையாததாகும். ஜனநாயக உணர்ச்சியும் சுதந்தரதாகமும், பரவிவரும் இந்நாளில், ஸ்தல ஸ்தாபன மெம்பர்களுக்கும் தலைவருக்குமுள்ள, பொறுப்பு அதிகமென்று கூற வேண்டியதில்லை. வாக்காளரின் அபிமானத்தையும் நீடித்துப் பெற்றிருக்க வேண்டுமானால், ஸ்தல ஸ்தாபன நிர்வாகிகளும், மெம்பர்களும், பொதுஜனங்களுக்குச் செய்ய வேண்டிய தங்கள் கடமைகளை உணர்ந்து செய்து வர வேண்டியதாகும்.

நமது காருண்ய ராஜாங்கத்தார் வழங்கவிருக்கிற புதிய அரசியலுக்கு, ஸ்தல ஸ்தாபனங்களே ஏற்ற பயிற்சி ஸ்தானமாகும். சுயராஜ்யம் வேண்டாம் என்று நம்மளில் யாருமே கூறமாட்டார்கள். ஆனால், நமக்கு தற்காலமிருக்கும் நிலைமை, சுதந்தரம், பயிற்சி இவைகளை கினைக்குங்கால், பிரிட்டிஷ் ராஜ்யத்தின் ஓர் அங்கமாய் சட்டம், அமைதி, ஒழுங்குகளுக்குக் கட்டுப்பட்டு, கௌரவமான முறையில் அடையவேண்டுமென்பதே மயன்போன்றவர்களின் விருப்பமாகும்.

நமது விருந்தினரான நண்பர், இராமநாதன் செட்டியார் அவர்கள், தமது தாலூகா போர்டு பிரஸிடெண்டு பதவியை பொறுப்புடன் வகித்துத் திறம்பட நடத்தி வருமாறு உங்கள் சார்பாகவும் என் சார்பாகவும் நல் வாழ்த்துக் கூறுவதோடு, அவர்கள் இன்னும் மேலான கௌரவம், பதவி, எல்லாவித க்ஷேம லாபங்கள் மென்மேலும் பெற்று நீண்டகாலம் சுகஜீவியாய் வாழ வேண்டுமாய்க் கடவுளைப் பிரார்த்திக்கின்றேன்.

பேச்சு முடிந்ததும் காரைக்குடி எஸ், எம், எஸ், வித்யாசாலை மாணவர்கள் சிலர் வாழ்த்துக் கீதங்கள் பாடினர். அதனிறுதியில் திரு. ராம. அண்ணாமலை செட்டியாரவர்கள் விருந்துக்குவரமுடியாதது பற்றிக் கடிதங்களும் தந்திகளுமனுப்பியிருந்த பலரின்பெயர்களை வாசித்தார்.

பின் தேனப்ப செட்டியாரவர்கள் பிரதம விருந்தினர்க்கு கோட்டையூர் நகரத்தார் சார்பாக ஒரு உபசாரப்பத்திரம் வாசித்து ஒரு வேலைப்பாடமைந்த வெள்ளிப்பேழையில் வைத்துக் கொடுத்தார். பிறகு தலைவர் கேட்டுக்கொண்டபடி வித்வான் வைநாகரம் ராமநாதன் செட்டியாரவர்களும் திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் அவர்களும்பாராட்டிப்பேசினார்கள். இப்பிரசங்கத்தின் பின் முக்கிய விருந்தினர் திரு ராமநாதன் செட்டியார் பதில் கூறினர். அதில் தம்மை உபசாரப் படுத்தியதற்காக தாம் நன்றி கூறுவதாகவும் லோகல்போர்டுகளை நிர்வாகம் செய்வதில் தமக்குப்போதிய அநுபவமில்லையென்றும், இயன்ற அளவு நேர்மையாக நடத்த முயல்வாரென்றும், அதற்கு அனைகள் தேவையென்றும் இந்த வைபவத்துக்கு தலைமை வகிக்க விசைந்த திவான்பகதூர் செட்டியாரவர்களை வாழ்த்துவதாகவும், தம்மைப்புகழ்ந்து பேசிய இரு பிரசங்கிகட்கும் நன்றி அறிவித்துக்கொள்வதாகவும் குறிப்பிட்டார்.

பின்பு தலைவர் அவர்கள் அடியில்வருமாறு முடிவுரை புகன்றார்கள்.

#### முடிவுரை.

கனதனவான்களே!

இந்த பல நண்பர்கள் வயிரைசம் ராமநாதஞ் செட்டியாரவர்கள் திரு. பிச்சப்பா சுப்பிரமணியஞ் செட்டியாரவர்கள் விருந்தினரைப்பற்றி மிகப் பாராட்டிப் பேசினார்கள். அவையாவும் மிக்கப் பொருத்த முடையதே.

நமது விருந்தினர், நண்பர், திரு. இராமநாதன் செட்டியார் அவர்களும் புகழ்ந்து பேசியிருக்கிறார்கள். அதற்குக் காரணம் என்னிடம் அவர்களுக்குள்ள அன்புமிகுதி மட்டுமே.

இச் சமயத்தில், நமது விருந்தினரின் சகோதரர் திரு. அழகப்ப செட்டியார் ஞாபகம் வருகின்றது. அவர் சிறு வயதிலேயே, இங்கு பூரண கல்வியும் கற்று ஐரோப்பா தேசம்சென்று அங்கும் பாரிஸ்டர் பரீக்ஷையில் தேறி, மிக்க புத்திசாலியாக பல வழிகளிலும் தேர்ச்சியுற்று இருக்கிறார் என்கிற நற்செய்தியை சொல்ல விரும்புகிறேன். அவர் அடுத்த சில மாதங்களில் இங்கு வந்து நம்முடன் கலந்துமிக்க கியாதி வாய்ந்தவராக யிருப்பாரென்று நான் எண்ணுகிறேன். நம்மினத்தாருக்கு ஏற்படும் பெருமை யாவும் நம் ஒவ்வொருவருக்குமே. அவருடைய திறமை, நற்குணங்களைப்பற்று பலவாறுகப் புகழ்ந்து, சமீபத்தில் இங்கு ஐரோப்பாவிலிருந்து விஜயமாகிய, மிக்க பெருமை வாய்ந்த முதிர்ந்த ஐரோப்பிய சிநேகிதர் ஒருவர் என்னிடம் சொல்லியதிலிருந்து நம்மினத்தாரின் முன்னேற்றத்துக்கு உதவி செய்பவர்களில் ஒருவராயிருப்பாரென்று நான் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்த சமயம் இங்கு நாம் கூடியிருக்கும் கொண்டாட்டத்துக்கு சம்பந்தமல்லாத ஒரு விஷயத்தை காலநேர நிலைமையை ஒட்டி சொல்ல வேண்டு மென்று என்னுடைய உத்தேசம். அதாவது, தற்காலம் நமது இனத்தார்கள் செய்துவந்த லேவாதேவித் தொழிலானது மிக்க சீர்கேட்டைந்திருக்கின்றன. பொதுவாக உலக வியாபார மந்தமே முக்கிய காரணமாக யிருந்தாலும் நம் முன்னோர்கள் கைக்கொண்ட லேவாதேவித் தொழிலானது தற்காலத்தில் பொருத்த மற்றதாக யிருக்கிறது. அதாவது முக்கியமாக. கீழ் பர்மாவிலே நாம் முன்னேறுங்கால் சுமார் இரண்டாயிரம் ஏக்கர் நிலம் நஞ்சை வெள்ளாண்மை நடந்து தற்சமயம் சுமார் ஒரு சோடியே காலலட்சம் ஏக்கர் கீழ்பர்மாவில் மட்டும் நஞ்சை வெள்ளாண்மை செய்து வருகின்றனர். இவ்வளவு அதிக வெள்ளாண்மைக்குப் பெரும்பாலும் நம் மினத்தாரின் லேவாதேவித் தொழிலின் உதவி பெரிதாக யிருந்து வந்திருக்க தனது நன்மையாக பர்மா தேசத்தில் இப்போதுள்ள பெரும்பாலான பர்மியர்கள் கருதாது நம்மிடமுள்ள சில அற்ப குற்றங்களை மிகைப்படுத்தி நம் தொழிலையும் இகழ்ந்து பொதுவாக இந்துக்களிடமே அதிக அதிவேஷமுள்ளவர்களாக யிருக்கிறார்கள். இவ்விதநிலைமையில நாம் நீண்டகாலம் மற்ற சிலோன், மலாயா, கொச்சின் சைனா, முதலான இடங்களில் முன்னுள்ள லேவாதேவித்தொழிலைப் பின்பற்றுவது சிரமமாகயிருக்கும். மேலும்முக்கியமாகவிளைபொருள்கள் அந்தந்த தேசங்களுக்கு வேண்டியவைகளை அவரவர்களும வெள்ளாண்மை செய்து தேவைக்கு மேற்பட்ட தானியங்கள் கிடைப்பதால், விலைவாசிகள்குறைந்து வியாபார முறைமைகள் சீர்கெட்டு இருக்கும் இக்காளிலே நமது பூர்வீக லேவாதேதொழிலைச்சிறுகச் சிறுகக் குறைத்து காலநேர்த்திக்குத்தகுந்தவாறு புதுத்தொழில்களில் பிரவேசித்து முன்னுக்கு வரும் வழியை ஒவ்வொருவரும் தேடிவரவேண்டியது ரொம்ப முக்கியமாகும். நமது பழைய தொழில்களுக்கு சென்றுவந்த நமது இனத்தார்களில் நாலில் ஒரு பாகம் கூட இனித் தேவையேற்படாது. முன் கொடுத்த சம்பளங்களில பாதி பாகம் கூட கொடுக்க வருவாய்க்கு இடமில்லை. ஆகையால் ஒவ்வொருவரும், மிக்க ஊக்கத்துடன், புது வழியில் சென்று முன்னுக்கு வரும் வழியை நம்மினத்தார்கள் தேடி வரவேண்டும். அந்நிலைமைக்கு வரும் வரையிலாவது நாம் செய்யும் அநாவசியமான செலவுகளை மிகக் குறைத்து வருவாயைப் பெருக்கும் வழியைத் தேடி நமக்குள்ள பெருமையைக் காப்பாற்றிக்கொள்ளவேணும்.

பிறகு வந்தனோபசாரம் கூறப்பட்டு 5-30க்குக் கூட்டம் கலைந்தது.

#### விருந்து.

கூட்டத்தின் பின்பு விருந்து நடைபெற்றது. சுமார் 500 பேர் ஏககாலத்தில் குறிச்சிகளில் உட்கார்ந்து பலகாரமருந்தக் கூடிய இருஹால்கள் தயார் செய்யப்பட்டிருந்தன.

#### சங்கீதம்

அனைவரும் சிற்றுண்டியருந்தியதும் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி அம்மாளின் பாட்டுக் கச்சேரி நிகழ்ந்தது. அது முடிந்ததும் எல்லோரும் தத்தம் ஊருக்குச் சென்றனர்.

---

## நோட்டீஸ்.

தேவகோட்டை சப் கோர்ட்டு
S. C. No 664 of 1932.

கூத்தப்புடையார் } வாதி

மாணிக்கங் கோட்டை பொன்னைப்பா உடையார் } பிரதிவாதி

வாதிக்கு பிரதிவாதி 18-10-29உ யில் ரூ 200—0—0—க்கு மீ 1—க்கு 100-க்கு ரூ 0-12-0 வீதம் வட்டி கண்டு எழுதிக் கொடுதிருக்கிற புரோநோட்டுப்படி கூடுதல் ரூ 253-12-0 யும் வசூலிக்க 12-10-32உ வாதி இவ்வழக்கிட்டிருப்பதில் 13-2-33உ வாயிதா ஏற்பட்டிருக்கிறது. ஷை தேதியன்று கோர்ட்டில் ஆஜராகி எதிர்வாத மிருப்பின் பிரதிவாதி தெரிவித்துக் கொள்ள தவறினால் Exparte ஆக ஷை தீர்பைசல் செய்யப்படு மென்று அறிவிக்க லாயிற்று.

1—2—33

ஆர். சிவராமன்
வக்கீல்.

---





## ஜில்லா கலெக்டர் முகாம்.

இராமநாதபுரம் ஜில்லாக் கலெக்டர் பிப்ரவரி 13; 14-தேதிகளில் சாக்கோட்டையில் முகாம். 15 முதல் 18உ வரை கண்டதேவியில் முகாம். 13உ யன்று பள்ளத்தூரில் ராவ்பகதூர் அருணாசலஞ் செட்டியாருக்கு சன்னத் வழங்கப்பெறு மென்று தெரிகிறது.

---

## தேவகோட்டை சப்கலெக்டர் மாற்றம்.

தேவகோட்டையில் சப் கலெக்டராக இருக்கும் மிஸ்டர் R. M. சுந்தரம் M. A., I. C. S. அவர்கள் அனந்தப்பூர் ஜில்லாவிலுள்ள பன்னேருண்டம் என்ற ஊருக்கு மாற்றப்படுகிறார். அவருக்குப் பதிலாக மிஸ்டர் எச்.எச். கார்லெஸ்டன் I. C. S. தேவகோட்டை சப் கலெக்டராக பிப்ரவரி 20உ வாக்கில் சார்ஜ ஏற்றுக் கொள்வாரென்று தெரிகிறது.

---

## லேவாதேவிக்காரர் மசோதாக் கண்டனம்.

மதுரை மூல்டானி ஷாப் சங்கத்தினர் தந்தி மூலம் அறிவிப்பதாவது: மதுரை, திருநெல்வேலி ராமனுதபுரம் ஜில்லாக்களிலெங்கும் நாங்கள் தொழில் செய்துவருகிறோம். லேவாதேவிக்காரர் மசோதாவை நாங்கள் பலமாக ஆட்சேபிக்கிறோம். வியாபாரத்துக்கு அதனால் இடையூறு ஏற்படுவதுடன், பாங்கி வியாபாரத்தையே நாசம் செய்து கண்ணியமான லேவாதேவிக்காரர் மீதும் பொய் வழக்குகள் தொடர இடமேற்பட்டுவிடும். விஷமிகளும் யோக்கியப்பொறுப்பற்ற கடன்காரர்களும் துன்பமிழைக்க வாரம்பித்து விடுவார்கள்.

---

## கடன்பத்திர மாற்று.

### 7 கோடி ரூபாய்க்கு மாறியிருக்கிறது.

கல்கத்தா, பிப் 4—

கரன்ஸி கண்டிரோலர் பின் வரும அறிக்கையை வெளியிட்டிருக்கின்றார்:—

1929-47-ம் வருஷத்தில் முடிவாகும் 5 வட்டி யுத்தக்கடன் பத்திரங்கள், 1933-ம் வருஷத்தில் முடிவாகும் 5 வட்டியுள்ள கடன் பத்திரங்கள் 1933-36-ம் வருஷத்தில் முடிவடையும் 6 வட்டியுள்ள கடன்பத்திரங்கள், இவற்றை 1960-70-ம் வருஷத்தில் முடிவடையக்கூடிய 3 வட்டிக் கடன் பத்திரங்களாக மாற்றும் வேலை நடந்து வருகிறது. இதுகாறும் 7 கோடி ரூபாய் பெறுமான கடன் பத்திரங்கள் மாற்றப்பட்டிருக்கின்றன.

---

## பிரெஞ்சு இந்தியாவின் குழந்தை மணத்தடை.

மசூலிப்பட்டணம், பிப்.4—

மசூலிப்பட்டணத்திலுள்ள பிரெஞ்சுப்பேட்டை என்பது பிரெஞ்சுக்காரருடைய ராஜ்ஜியத்தைச் சேர்ந்ததாகும். இனி இந்தப் பேட்டைக்குள் விவாகங்களை நடத்தி ஊர்வலங்களை விட உத்தேசிக்கின்றவர்கள், முன்னதாகவே அதிகாரிகளது அனுமதியைப் பெற வேண்டுமென்றும் இந்த எச்சரிக்கையை மீறி நடப்பவர்கள் 1827-ம் வருஷத்துச் சட்டத்தின் 23-வது பிரிவுப்படி தண்டிக்கப் படுவார்களென்றும் இங்குள்ள பிரெஞ்சு ஏஜெண்ட் அறிவித்திருக்கிறார். இந்த விடத்தில் பால்ய விவாகம் செய்வதால் சாரதா சட்டத்தின் கீழ் அவை வரமாட்டாதென்ற எண்ணத்தின் காரணமாக ஏராளமான விவாகங்கள் இங்கு ரகசியமாக நடைபெறுவதாகக் கூறப்படுகிறது.

## கானாடுகாத்தான்

### ஆங்கில ஆரம்பப் பாடசாலை.

(ஒரு நிருபர்.)

கானாடுகாத்தான் ஆங்கில ஆரம்பப் பாடசாலை மாணவர்களது முதல் சங்கக்கூட்டம் 1933 ஹு பிப்ரவரிமீ 3உ வெள்ளிக்கிழமை மாலை 4-மணிக்கு ஷை பாடசாலையில் கானாடுகாத்தான் திரு சா. ராம. சித. பழனியப்ப செட்டியார் அவர்களது தலைமையின் கீழ்க் கூடிற்று. கடவுள் வணக்கத்தின் பின்பு ஷை சங்க மாணவர்கள் தலைவர்கட்கும் அச்சங்கத்து உபந்யாசகர் தேவகோட்டை ரேஞ்சு ஸ்கூல் டிப்டி இன்ஸ்பெக்டர் திரு. ப. கிருஷ்ணசாமி ஐயர் அவர்கட்கும் நல்வரவேற்புப் பத்திரங்கள் வாசித்துவழங்கினர். தலைவர் அவர்கள் உபசாரத்திற்கு வந்தனமளித்து இச்சங்கத்துக்குத்தலைமை வகிக்க ஏற்பட்டதைக்கண்டு மனம் களிப்புறுவதாகவும் மாணவர் சங்கம் அத்தியாவசியமென்றும், அதனுடைய முக்கிய நன்மைகளையும் கூறி, பின்பு கனம் டிப்டி இன்ஸ்பெக்டர் அவர்களை உபந்யசிக்கும்படி கேட்டுக்கொண்டார். அப்படியே உபந்யாசகர் சுமார் 45 நிமிஷம் வரை உருக்கமாகவும், குதூகலமாகவும் அரிய பல விஷயங்களை எடுத்துரைத்தார். பலருடன் பேசுவதற்கும் பழகுவதற்கும் அறிவை விருத்தி செய்து கொள்வதற்கும் மனிதர் ஒன்றுகூடி இன்புற வாழ்வதற்கும் மாணவர் சங்கம் பேருதவியாயிருக்கிறது என்றார். சங்கம் பெருமை அடைவதற்கு மாணவர்கள் ஊக்கமும் பெற்றோர் ஒத்துழைப்பும் சங்க நிர்வாகிகள் செய்யும் வேலையையும் பொறுத்து உள்ளதென்றும் மேலே சொன்ன ஒவ்வொன்றும் எவ்வித முறையில் இருக்கவேண்டுமென்பதையும் நன்கு விளக்கினர். இச்சங்கமானது நமதுநாடு முன்னேற்றமடைய வழிகாட்டியாக உள்ளது என்றும் இச்சங்கம் வெகுகாலம் வரை விளங்கவேண்டுமென்றும் கூறி முடித்தார். அக்ராசனர் அவர்கள் உபந்யாசத்தை சிலாகித்துப்பேசி இச்சங்கம் நன்றாக த்தழைத்து ஓங்கவேண்டு மென்று கூறிமுடித்தார். ஷை பாடசாலைத் தலைமை உபாத்தியாயர் Mr. எஸ். ராமசாமிஅய்யர்அவர்களால்கடந்தவிபரங்களைச் சுருக்கமாகப்பேசி அக்கிராசனருக்கும் உபந்யாசகருக்கும் மற்று மெல்லோருக்கும் வந்தனோபசாரம் கூறப்பட்டு கூட்டம் சுமார் மாலை 6மணிக்கு நாட்டு வாழ்த்து ராஜ வாழ்த்துடன் இனிதுமுடிந்தது.

---

## "ஹரிஜன்" புதிய காந்தி பத்திரிகை.

மகாத்மாகாந்தியின் உபதேசப்படி நடத்தப்படும் 'ஹரிஜன்'என்ற வாரப் பத்திரிகைக்கான ஏற்பாடுகள் பெரும்பாலும் முற்றுப் பெற்றுவிட்டன. அது சம்பந்தமாகக் கூறியபோது காந்திஜி இவ்வாறு கூறினர்:—

தீண்டாதார் ஊழியர் சங்கத்தின் சார்பில் நடைபெறும் ஹரிஜன் என்ற பத்திரிகையின் முதல் இதழ் பெப்ரவரி 11ந்தேதி சனிக்கிழமை யன்று வெளிவரும். அது அச்சடிக்கப்படுமிடம் ஆர்யபூஷன் அச்சுக்கூடம் திரு. எ. என். பட்டவர்த்தன் அவர்கள் அச்சிடுவோராகவும் பிரசுரகராகவும் பதிவு செய்திருக்கின்றார்கள். திரு. ஆர். வி. சாஸ்திரி பி. ஏ. பி. எல். ஆசிரியராவர். நான் இயன்ற அளவு அப்பத்திரிகைக்கு உதவி புரிவேன். அப்பத்திரிகையும், மிகவும் ஆதரிக்கப்படுமென்று நம்புகிறேன். வருஷ சந்தா நான்கு ரூபாய். வெளிநாடுகட்குஐந்து ரூபாய் எட்டு அணா, தனிப்பிரதி 1 அணா.

## புதுவயல்.

ஸ்ரீ சரஸ்வதி வித்தியாசாலை:—நிகழும் தைமீ 4-தேதி காலை ஒன்பதரை மணிக்கு சங்கச் சார்பில் ஸ்ரீ சரஸ்வதி வித்தியாசாலையின் ஆரம்ப விழா கலாசாலைக்கென அமைக்கப் பெற்றிருக்கும் கட்டிடத்தில் நடைபெற்றது. கடவுள் வாழ்த்து பாடிய பின் காரைக்குடி திரு. ஆவி. லெ. அருணாசலஞ் செட்டியாரவர்கள் கலாசாலையைத் திறந்து வைத்தார்கள். ஆசிரியரவர்களால் மாணவர் மாணவிகளுக்குக் கல்வி போதிக்கப் பெற்று விழா இனிது நிறைவெய்தியது. இவ்வித்தியாசாலையில் தற்சமயம் திரு. எஸ். கிருஷ்ணய்யங்கார் கே. வி. பத்மாவதி அம்மாள் ஆகியோர் ஆசிரியராக நியமிக்கப் பெற்றிருக்கிறார்கள்.

வழியனுப்பு உபசாரம்:—ஸ்ரீ சரஸ்வதி சங்கத்தின் அங்கத்தினர்களான திரு. அ. சு. பள. சு. சோம. ராமசாமி செட்டியாரவர்கள். பர்மாநாடு செல்வது கருதி தைமீ 16-தேதி காலையில் திரு. வீர. பழனியப்ப செட்டியாரவர்கள் தலைமையிலும் திரு. பள. ப.ப. வீரப்ப செட்டியாரவர்களும் திரு. பெரி. அள. வீர. அளகப்ப செட்டியாரவர்களும் பர்மா நாடு செல்வது கருதி தைமீ 25-உ காலையில் திரு. யெ. பெரி. வீர. வீரப்பசெட்டியாரவர்கள் தலைமையிலும் வழியனுப்பு உபசாரக் கூட்டம் நடைபெற்றது. அதுகாலை விருந்தினர்களைப் பாராட்டிப் பலர் சொற்பொழி வாற்றினார்கள். அதன் பின் விருந்தினர்களுக்கு மாலை சூட்டப்பெற்று, வந்தன வாழ்த்துடன் கூட்டம் நிறைவெய்தியதாஎன காரியதரிசி எழுதுகிறார்.

### கத்திக்குத்து.

### செட்டியார்கள் கைது.

ரங்கூன்— புரோம் ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்த கந்தன் செட்டியார் என்ற ஒரு லேவாதேவிக்காரரை ஒரு பர்மியன் கொடுமையான முறையில் கத்தியால் குத்தி விட்டதை முன்னிட்டு மூன்று நாட்டுக்கோட்டை செட்டியார்களுட்பட ஐவரை ரயில்வே போலீசார் கைது செய்திருக்கின்றார்கள்.

கைதிகளில் ஒருவன் சொல்லிவிட்டதாகவும் அதனாலேயே செட்டியார்கள் கைது செய்யப்பட்டிருப்பதாகவும் சொல்லப்படுகிறது.

## ரங்கூன் உபதேர்தலில் பிரிவினைக் கட்சிக்கு வெற்றி.

ரங்கூன், பிப். 4—

பர்மா சட்டசபைக்குக் கீழ் ரங்கூனில் நடந்த உபதேர்தலில் பர்மாப் பிரிவினையை வேண்டும் ஜனக்கட்சி மெம்பர்களான யு. பாபீயும், மாங் ஒன்கையினும் தெரிந்தெடுக்கப்பட்டனர். யு. பாபீக்கு அதிகப்படியான வாக்குகள் கிடைத்தன, ஒன்கையின் என்பவருக்கு அவருக்கடுத்தபடியாக அதிகப்படி வாக்குகள் கிடைத்தன. சுயேச்சைக்கட்சி மெம்பரும் சர்வகட்சி மகாநாட்டுப் பிரதிநிதியுமான கிம்சின் தேர்தலில் 3-வதாக இருந்து தோல்வியுற்றார்.

---

## திருவாடானைத் தாலுக்கா போர்டு.

### உபதலைவர் தேர்தல்.

ஸ்ரீமான் எ. ஆர். காளையராஜா தலைமையில் இன்று திருவாடானை தாலூகா போர்டு கூட்டத்தில் ஜனப் எம். ஆர். பி. சையது முகம்மது சாகிப் பகதூர் பிரேரிக்க, திரு டி. எ. எஸ். எ. சுப்பிரமணிய செட்டியார் ஆமோதிக்க திரு. எ. எல். எ. ஆர். சோமநாதன் செட்டியார் ஒரு மனதாக உபதலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## தமிழ்நாட்டு வாலிபர்களுக்கு வேண்டுகோள்.

நாம் ஜெனித்த தாய்நாட்டின் கலத்தைக் கருதவேண்டுவது வாலிபர்களின் கடமையல்லவா? நமது நாட்டின் க்ஷேமத்தை உணராது வீண்காலம் கழிப்பது நம்போன்ற வாலிப மக்களுக்கு அழகல்ல வென்பதை நினையுங்கள். வாலிப பருவங்கொண்ட தமிழ் நாட்டிளைஞர் சுதந்திர உணர்ச்சி பெற்றுத் தூயவாழ்வு நடத்த வேண்டு மென்பது எனது ஆவல். நம்மில் சில வாலிப இளைஞர்கள் உலக விஷயமே ஒன்றுமறியாது, சிற்றின் பச்சேர்க்கை யென்னும் தீயவழியில் புகுந்து மனம்போனபடி தங்களின் வாழ்நாளை வீணாக்குகின்றார்கள். என்னே இளைஞர்களின் செய்கை! உலகமாய்கை யறியாது ஓர் கொடிய வீழ்ச்சியில் வீழ்ந்து உழல்கின்றனர். இன்னவர்களின் செய்கையை யெண்ணுந்தோறும் நமது ஹிருதயம் பனிக்கட்டி உருகுவதுபோல் வடிந்தோடுகின்றது.

ஒவ்வொரு வாலிபரும் தனது நிலைமையை உணராது சிற்றின்ப மோகமாய்த் திரிந்து பல தீய வழக்கங்களைக் கையாண்டு நாளடைவில் மேஜரான பிறகும் மைனர் என்ற பட்டமும் பெற்றுவிடுகின்றார்கள். இன்னவர்களை யீன்றெடுத்த தாய் தந்தையரோ புதல்வனின் அடாத செய்கை கண்டு மனம் வருந்தி மீளாத்துக்கத்திலாழ்ந்துவருந்துகின்றனர். என்னே கொடுமை கொடுமை வாலிபர்களே! இன்னமும் கீழ்த்திசையடையாது மேல் நோக்கி நமது கடமை யென்னவென்பதை ஆராய்ந்து பாருங்கள்! வட நாட்டு வாலிப மக்களைப் பாருங்கள்! வீரப் புதல்வர்களாய்த் திகழ்கின்றனர். வட நாட்டு வாலிப வீரர்களைப்போல் நாமும் தென்னாட்டு வாலிப வீரர்களாயிருக்க வேண்டும். நாம் ஜெனித்தது இந்திய நாடென்பதை யறியுங்கள்! நம்மை யீன்றெடுத்த தாய் இன்று தத்தளித்துக் கொண்டிருக்கிறாளென்பதை உணருங்கள். இந் நிலையில் தமிழ் நாட்டு வாலிபர்கள் கண் திறக்காது காலத்தைக் கடத்துகின்றனர். நமது கடமையை உணராது இருப்போமாயின் யீன்றெடுத்த தாய்க்கு இழுக்கேற்படுமன்றோ? தமிழ் நாட்டு வாலிபர்காள்! நான் ஒரு அறிஞனல்ல, கவியில் தேர்ந்த கம்பனல்லன், தாய் நாட்டுக்குச் சேவை புரிய வேண்டிக்கடன் பட்டுள்ளேன். அதைச் செய்வதே இச் சிறியேனின் கடமை. நீங்கள் யாவரும் சுதந்திர உணர்ச்சி பெறுங்கள். தேச சேவை செய்ய முற்படுங்கள். எதிர்கால இந்தியா வாலிபர்களைப் பொறுத்து நிற்கின்றது. சுதந்திரம் பெற்ற தீரர்களாகத் திகழுங்கள்! இந்திய நாடு செழிப்புற்றோங்க.

ஆர்.எம்.எல்.எம். கதிரேசன்.

---

## தென்னிந்திய மருத்துவர் சங்கம்.

### ரங்கய்யர் மசோதாவுக்கு ஆதரவு

3-2-33 மாலை 6 மணிக்கு மேற்படி சங்க நிலையத்தில், மேற்படி சங்கஸ்தாபகரும் தலைவருமாகிய பண்டிட் ஆனந்தம் அவைத் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் கூடி, இந்தியா சட்டசபையில் ஸ்ரீமான் ரெங்கய்யர் கொண்டுவந்திருக்கும் ஆலயப்பிரவேச மசோதாவைத் தென் இந்திய மருத்துவ சங்கத்தினர் ஏகமனதாய் ஆதரிப்பதாகத் தீர்மானித்து திரு. ரெங்கய்யருக்குச் சங்கத் தலைவர் பண்டிட் ஆனந்தத்தால் தந்தி கொடுக்கப்பட்டதாக மேற்படி சங்கக் காரியதரிசி அறிவிக்கின்றார்.

# குமரன்

காரைக்குடி
ஆங்கிரஸ-ஹூ தை-மீ உஎஉ


## புனர் விவாகம்.

ஒரே ஒருமுறைதான் மணம் செய்து கொள்ளலாம் என்றவிதி ஆண்மக்களைப் பொறுத்த வரை எந்தக் குழுவினரிடமுமிருப்பதாகத் தெரியவில்லை. கல்யாணம் என்பது ஒரு மதக் கோட்பாடாகக் கருதப்படுகின்றது. பெரிய ஜனத்தொகையுள்ள மதங்களில் கிறிஸ்து மதம் பத்தமதம் மகமதிய மதம் இந்துமதம் என்பவைகளே முக்கியமானவையாகும். இவை நான்கும் ஆண்களின் புனர் விவாகத்தை மறுக்கவில்லை. கிறிஸ்தவ மதம் மட்டும் ஒரு மனைவியிருக்கும்போது இரண்டாவது மனைவியைக் கல்யாணம் செய்துகொள்ள அனுமதிக்கவில்லை. முகமதிய மதமும் புத்த மதமும் பல மனைவிகளைக்கல்யாணம் செய்து கொள்வதை மறுக்கவில்லை. ஆனால் இம்மூன்று மதங்களிலும் ஆண்மக்களைப் போலவே பெண்மக்களும் புனர் விவாகம் செய்து கொள்ளலாம். ஒரு புருஷன் இருக்கும்போது இன்னுமொரு புருஷனைக் கல்யாணம் செய்துகொள்ள முடியாது. ஆனால் விதவையாக இருக்கவேண்டிய கட்டாயமில்லை. புருஷன் இறந்தால் பெண்கள் மறு விவாகம் செய்வதை இம்மூன்று மதங்களும் தடுத்து நிற்கவில்லை. இந்துமதமும் பெண்கள் மறுமணத்தைத்தடுத்து நிற்கவில்லை. ஆனால் இந்து மதத்திற்குத் தாமே சொந்தக்காரரென்று நினைத்துக்கொடிருக்கிற வைதீகர் சிலரே இதனையெதிர்க்கின்றனர். இந்து மதத்தின் ஜனத்தொகை சுமார் 23 கோடியாகும். இந்த ஜனங்கள் எண்ணற்ற ஜாதியாராகப் பிரிக்கப்பட்டிருக்கின்றனர். புருஷனிழந்த பெண்கள் மறுமணம் செய்துகொள்ளும் விஷயமானது ஜாதி வழக்கமாக இருக்கிறதேயன்றி மத வழக்கமாக இல்லையென்பதை யுணரவேண்டும். ஹிந்து மதத்தின் கொள்கையாக இருக்குமானால் சில ஜாதியார் பெண்கட்கு மறுமணம் செய்யவும் வேறு சிலஜாதியார் பெண்களை விதவைக்கோலம் கண்டு துன்புறுத்தவும் இடமேற்படமுடியாது. வைதீகர்கட்கு இருக்கிற சாக்கெல்லாம் "மதசம்பந்தமானது; இதைவிட்டால் மதம் போய்விடும்" என்ற சொற்கள் தான் கையிருப்பிலிருக்கின்றன. மதமென்பதென்ன? எதில்அது போகும்? என்ற விஷயங்களே அர்த்தமாகிறதில்லை. பழய மகாராணியார் "மதத்தில் அரசாங்கம் தலையிடாது" என்று வாக்களித்ததால் அதைப் பற்றிக்கொண்டு முதற் பல்லவி பாடுகின்றனர். ஜனங்கள் மதமென்பதைப் படிப்பதற்கு உரிமையின்றி அடக்கப்பட்டும், ஆரம்பக் கல்விகூடக் கற்க வசதிபற்றும் கிடக்கின்றனர். ஆனால் "மதந்தான் தங்களுக்கு யாடு கன்று மக்கள் செல்வம் எல்லாந்தர வல்லது" என்ற எண்ணம் நிறைய ஏற்றிவைக்கப்பட்டிருக்கின்றனர். இதன் பயனாக "மதம் அழிந்து போகும்" என்று கூறினால் பொதுஜன ஆதரவு கிடைக்குமென்பதை ஆதாரமாகக் கொண்டு இரண்டாவது பல்லவியை வைதீகர் பாட ஆரம்பிக்கின்றனர். இதைத் தவிர பெண்கள் மறுமணத்தை மறுக்கவகையொன்று மில்லை.

இந்த விஷயமாக சென்ற பல ஆண்டுகளாகப் பிரசாரம் நடைபெற்று வருகின்றது. கங்காராம் ஏராளமான பொருளை வழங்கி விதவாவிவாக சகாய சங்கம் கண்டு பெண்கள் மறுமணத்திற்குப் பெரும் ஆதரவு காட்டியிருக்கிறார், வீரேசலிங்கம் பந்துலு ஆந்திர நாட்டில் பெரும் வேலை செய்தார். ஜி. சுப்பிரமணிய ஐயர் தைரியமாகத் தமிழ்நாட்டை விழிப்படையச் செய்தார். ஆரிய சமாஜிகளும் பிரமசமாஜிகளும் உதவி புரிந்தனர். பொதுஜனக் கிளர்ச்சியும் ஆராய்ச்சி யறிவும் வளர வளர பெண்கள் மறுமணம் அதிகரிக்க ஆரம்பித்து விட்டது. உடும்புப் பிடியாகப் பிடித்து நிற்கிற சமூகங்களிலும் துணிவு கொண்டு பெண் மக்கள் மறுமணம் செய்து கொண்டிருக்கின்றனர். பெண்மக்கள் பால் ஆராய்ச்சி யறிவு நுழையாதிருக்கிற சில வகுப்பினருள் மட்டும் மறுமணங் கூடாதென்ற எண்ணம் மாறுமலிருந்து வருகிறது. துணிந்து செய்து கொண்டால் அப்படிச் செய்து கொண்ட பெண்களையோ ஆடவர்களையோ சமூகத்தார் ஒன்றுஞ் செய்ய முடிகிறதில்லை. சமூக பஹிஷ்காரம் செய்வதென்பதற்கு இக்காலத்தில் பொருளே கிடையாது. சமூக பகிஷ்காரம் முன்னளில் செய்யப்படுமானல் சொந்த ஊரில் குடியிருக்க முடியாது. ஊரிலுள்ள எந்த வகுப்பினரும் உதவிபுரிய மாட்டார்கள். வெளியூர்கட்குச் சென்றாலும் இந்த உதவிகள் கிடைக்கமாட்டா. ஒரு ஊரில் புறக்கணிக்கப்பட்டவருக்கு மற்ற ஊரார் ஆதரவு கொடுக்கமாட்டார். இன்றைய நிலைமை தலைகீழாக மாறிவிட்டது. விதவா விவாகம் செய்து கொண்டதற்காக ஒருவரை சமூக பஹிஷ்காரம் செய்தால் அந்த மணமக்களை மாலையிட்டு வரவேற்று வாழ்த்தி ஆதரிக்கத் தேசப் பொதுஜனங்களில் பெரும்பாலோர் தயாராக இருக்கின்றனர். இதனால்தான் விதவா விவாகம் நாட்டில் நாள்தோறும் நடைபெற்றுக் கொண்டே யிருக்கிறது. வாலிபர்கள் துணிதல் வேண்டும். வைதீகர்கள் எந்தத் திருத்தத்தையும் ஏற்றுக்கொள்வதே யில்லை. சொல்வதை ஆராய்ந்து பார்க்கிறதுமில்லை. யாராவது திருத்தம் சொன்னல் ஏற்றுக்கொள்ளவே மாட்டார்கள். எதிர்ப்பார்கள். சத்தம் போடுவார்கள். கடைசியில் ஒன்றும் முடியாவிட்டால் ஒத்து வருவார்கள். பின்னல் சாஸ்திரத்தில் இதற்கும் இடமிருக்கிறதென்று கூறவும் முன் வருவார்கள். ஒன்றுங் கிடைக்காவிட்டால் கலியுகத்தில் இப்படித்தான் நடக்குமென்று பகவான் கிருஷ்ணபிரான் கீதையில் உபதேசித்து விட்டாரென்று கூறி அடங்குவார்கள். இதைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. வாலிபர்கள் துணிதல் வேண்டும். கணவனிழந்த கன்னியர் வீரத்துடன் முன் வருதல் வேண்டும். தடுக்க யாருமில்லையென்பதை உணர்தல் அவசியமாகும்.

## உள்ளூர்ச் செய்தி.

ஹிந்தி ஸ்கூல் நிதிக்காக நாடகங்கள்:—காரைக்குடியில் ஹிந்தி ஸ்கூலின் அவசியத்தைக்கருதி அதன் அபிவிருத்திக்காக ஸ்ரீபால சரஸ்வதி சங்கீத சபையார் 11-2-33-ந்தேதி சனிக்கிழமை 'ராமதாஸ்' நாடகமும், 13-2-33-ந்தேதி 'துருவன்' நாடகமும் காரைக்குடி ஷண்முக விலாஸ் எலெக்ட்ரிக் தியேட்டரில் நடித்துக் காட்டுவார்களென அறிவிக்கப்படுகிறது.

பாட்மிண்டன் டோர்னமெண்ட்:—இவ்வூர் முத்தாலம்மன் கோவில் வடகரையிலிருக்கும் எஸ். எம். பாட்மிண்டன் கிளப் டவுன் ஆல்பாய்ஸ் டபிள் டோர்னமெண்ட் மார்கழிமீ 22ந்தேதி ஆரம்பிக்கப்பட்டது. 18 டீம்கள் கலந்து கொண்டன. அதில் (1) B. B. C. A. டீமும் S. M. B. A. டீமும் இ:மதி 14ம் நாள் பைனலுக்கு வந்தன. அன்று திரு. ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கன் செட்டியாரவர்கள் தலைமைவகித்தார்கள். 6-30 மணிக்கு விளையாட்டு ஆரம்பிக்கப்பட்டு மூன்று கேம் வெகு அழகாகவும் சாதுர்யமாகவும் விளையாடி 8 மணிக்கு முடிந்தது. பிற்பாடு தலைவர வர்கள் விளையாட்டினால் உண்டாகும் பலவித நன்மைகளைப்பற்றி விரிவாகப் பேசி வின்னருக்கு சென்டர் கோல்ட் சில்வர் மெடலும் ரன்னருக்கு சில்வர் மெடலும்பரிசளித்தார்கள் என்றுகாரியதரிசி சி. மு. சி. அருணசலன் செட்டியார் அறிவிக்கிறார்.

## திருவாங்கூர் அரசியல்.
### கிறிஸ்தவ—முஸ்லீம் ஈழுவர்களின் கோரிக்கை.

திருவனந்தபுரம், பிப், 6—

திருவாங்கூர் சட்டசபையில் கிறிஸ்தவருக்கும் முஸ்லீம்களுக்கும் ஈழுவர்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கும் விஷயமாக அவர்கள் வெளியிட்ட கோரிக்கையைப்பற்றி கவர்ன்மெண்டு அறிக்கை வெளியானதற்கேற்ப இப்போது திருவாங்கூர் கவர்ன்மெண்டார் ஓட்டுத் தொகுதிகளைத் திருத்திருக்கின்றனர். கவர்ன்மெண்டார் தாங்கள் யோசிக்கும் விதத்தில் ஓட்டுத் தொகுதியைப் பிரித்தால் கிறிஸ்தவர்கள் பொதுத் தொகுதி, வியாபாரத் தொகுதி முதலியவைகளில் குறைந்தது 16 ஸ்தானங்கள் பெறுமென்றும் ஈழுவர்களுக்கும் பொதுத்தொகுதியிலிருந்து இரண்டு அல்லது மூன்று ஸ்தானங்கள் கிடைக்குமென்றும் முன்னம் கூறியிருக்கிறார்கள். இப்போது செய்துள்ள ஏற்பாட்டில் மூன்று கிறிஸ்தவர், நான்கு ஈழுவர்கள். இரண்டு முஸ்லீம்கள் என்ற முறையில் பிரதிநிதித்துவம் அளித்தால், குறைந்தது 19 கிறிஸ்தவர்களும், ஆறு ஈழுவர்களும் மூன்று முஸ்லீம்களும் புதிய சபையில் இருப்பார்கள். 10 தினங்களுக்குள் பொதுஜனங்கள் அபிப்பிராயத்தை அறிந்து கொண்டு இந்தத் திட்டத்தை ஸ்திரப்படுத்தி விடுவார்கள்.

## சட்டசபைத் தேர்தல்.

திரு. ஆரோக்கியசாமி முதலியார் மரணத்தால் சென்னைச் சட்டசபையில் ஏற்பட்டுள்ள காலி ஸ்தானத்திற்கு அட்வோகேட்டுகளான திருவாளர்கள் டி. குழந்தையும், பி. ஹர்பர் சுந்தரமும் அபேட்சகராக நிற்பதாக அறிவிக்கின்றனர்.

## ஸ்பெயின் மாஜி அரசர்.

பம்பாய், பிப் 6—

ஸ்பெயின் தேசத்து மாஜி அரசரான ஆல்பான்ஸோ XIII மிராண்டா பிரபுவோடு இன்று பம்பாய் வந்து சேர்ந்தார். "டாலடோ பிரபு" என்ற மாறு பெயருடன் அவர் இத்தாலியாவிலிருந்து புறப்பட்டு வந்திருக்கிறார். அவர் வெள்ளைக் கம்பளிக் கால்சட்டையும் பழுப்பு நிறமான ஒரு மேற்சட்டையும் அணிந்துகொண்டு ஆனந்தமாக சிகரெட்டு பிடித்துக்கொண்டிருந்ததை நான் பார்த்தேன். பம்பாய்க் கவர்ன்மெண்டின் ராணுவக் காரியதரிசியும் மெய்காப்பாளரும் சிப்பந்திகளும் அவரை வரவேற்றார்கள். மாஜி ஸ்பெயின் அரசர் கவர்னர் மாளிகைக்கு ஒரு மோட்டார் வண்டியில் சென்றார். அப்போது அங்கு கூடியிருந்த கோவாக்காரர்கள் சிலரும் ஸ்பெயின் தேசத்தினர் சிலரும் கரகோஷம் செய்து தங்கள் சந்தோஷத்தை வெளியிட்டனர். மாஜி ஸ்பெயின் அரசர் மூன்றுநாள் பம்பாயில் தங்கி யிருந்துவிட்டு 9-ந்தேதியன்று கொழும்புக்குப் பிரயாணமாவார். இவர் வந்த கப்பலில் பிரயாணஞ் செய்துவந்த ஒருவர் அல்பான்ஸோ சுகவாசியென்றும் சந்தோஷ புருஷரென்றும் நடனமாடிக்கொண்டும் சீட்டாடிக்கொண்டும் அவர் பிரயாணத்தைக் கழித்ததாகவும் அவர் பொதுவாக யாவரும் சாப்பிடும் இடத்துக்கு வந்துதான் சாப்பிடுவதுண்டென்றும் கூறினர். அவர் புன்சிரிப்புடனிருக்கிறார். இந்தக்கப்பலில் டாக்டர் அன்ஸாரி, திருமதி, தாஸ், பீகம்ஷா நவாஸ், கோலாப்பூர் திவான் முதலிய பிரபலஸ்தர் பலர் வந்திறங்கினர்.

## கொச்சியில் ஜனக்கணிதி.

1931-ம் வருஷத்தில் கொச்சி சமஸ்தானத்தில் எடுபட்ட ஜனக்கணிதியின் முடிவு இன்று வெளியாகி விட்டது. ஜனக்கணிதி கமிஷனரான திரு. டி. கெ. சங்கரமேனன் தயாரித்துள்ள யாதாஸ்தில் சில முக்யமான புள்ளி விவரங்கள் வருமாறு:—கொச்சியின் பூரா விஸ்தீரணம் காட்டுப்பிரதேசம் உள்பட 1480 சதுரமைல். 1931 பிப்ரவரி 29-ந் தேதி ஜனத்தொகை 12 லட்சத்து 5 ஆயிரத்து 16. அதில் ஸ்திரீகள் 6,15,203 பேர் முந்திய ஜனக்கணிதியை விட 2,25,936 பேர் மொத்தத்தில் அதிகம். வியாபாரம், விவசாயம், கைத்தொழில் துறைகளில் அநுகூல நிலைமையும், பொதுவாக விருந்த சுபிட்ச நிலைமையுந் தான் இதற்குக்காரணம். அதோடு 10 வருஷத்துக்கு முன்பு எடுத்த ஜனக்கணிதி அவ்வளவு சரிவர எடுபடவில்லை. புதிய கணக்குப்படி சதுரமைலுக்கு 814 பேர் வசிக்கிறார்கள். 55 வருஷத்துக்கு முன்னிருந்ததைவிட இது 2 மடங்காகும். டில்லி நீங்கலாக இந்தியாவில் வேறு எந்தவிடத்திலும்இவ்வளவுஜனத்தொகை விகிதம் கிடையாது. கொச்சிக்கு அடுத்தபடியாக திருவாங்கூரைத்தான் சொல்லலாம், பரோடா கொச்சியைவிட ஐந்தரை மடங்கு விஸ்தீரணம்; ஆனால் ஜனத்தொகை கொச்சியைவிட 2 பங்குதான் அதிகம். மைசூர் 20 மடங்கு அதிக விஸ்தீரணமாயிருந்தாலும் கொச்சியை விட 6 மடங்கதிகமான ஜனத்தொகையே அங்கிருக்கிறது. ஐதராபாத்தின் விஸ்தீரணம் 56 மடங்கு அதிகம்; ஆனால் ஜனத்தொகை 12 மடங்குதான் அதிகம். ஜம்மு, காஷ்மீரம் 57 மடங்கு பெரிது; ஆனால் 3 மடங்கு அதிகமாகத் தான் ஜனத்தொகை. துறைமுக வேலை கொச்சியில் அபிவிருத்தி யாகிவிட்டால் ஜனத்தொகை இன்னும் அதிகரித்து வரும்.

## திருநெல்வேலிமாணவர்சங்கம்
### ஸ்ரீ மு. கதிரேசன் செட்டியார் பிரசங்கம்.

திருநெல்வேலி டவுன் மாணவர் சங்கத்தின் ஆதரவில் தடி வீரன் கோவில் தெரு மைதானத்தில் வெள்ளிக்கிழமை மாலை 6-30 மணிக்குமேல் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் மகிபாலன்பட்டி பண்டிதமணி ஸ்ரீ. மு. கதிரேசஞ்செட்டியார் "கண்ணகியின் கற்பு" என்னும் பொருள் குறித்து ஒரு அரிய பிரசங்கம் செய்தார்.

## ஒரு திருத்தம்.

ஆங்கிரசஹூ ஆவணிமீ 10உ வெளியான குமரன் வாரப்பதிப்பு 10-ம் பக்கம் 3-வது பத்தியில் விளம்பரம் என்ற தலைப்பின்கீழ் வெளியாகியிருப்பதில் "ரயில் ரோடுக்கு மேல்புரம் அடுத்த பாலத்துக்கும் மேற்கு" என்றிருப்பதை "ரயில் ரோட்டுப் பாலத்துக்கு மேல்புறம் அடுத்த காலி இடத்துக்கும் மேற்கு" என்று திருத்திப் படிக்கவேண்டும்.

பத்திராதிபர், குமரன்.



## மகாத்மாவின் பதில்.

புனு, பிப்ர 7—

பூரி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரியார் திரு. ரங்கய்யருக்கு எழுதிய கடிதத்தைப்பற்றியும் அதன் மேல் அவர் எழுதிய பதிலைப் பற்றியும் காந்திஜி பின் வருமாறு தமது அபிப்பிராயங்களைத் தெரிவித்தார். "ஆலயப் பிரவேச மசோதாக்களைப்பற்றி அப்படிப்பட்டதோர் கடிதத்தை ஜகத்குரு எழுதிவிட்டதற்கு நான் வருத்தப்படுகிறேன். மத சம்பந்தமாகவுள்ள சுவாதீனத்தில் இந்த மசோதாக்கள் ஆக்கிரமிக்கவில்லை என்று நான் நினைக்கிறேன். ஆனால், இரண்டு மசோதாக்களும் அந்த சுவாதீனத்தைப் பாதுகாக்கின்றன. ஜகத்குரு உபயோகப்படுத்தியுள்ள உதாரணம் சரியல்ல. இந்த மசோதாக்களைப் பற்றின வரையில் எந்த வித்தையிலும் நிபுணத்துவம் அவசியமில்லை. தங்களுடன் தொழுவதற்கு யாரைச் சேர்த்துக்கொள்ளலாமென்று தீர்மானிக்க அவரவருக்குச் சுவாதீனமுண்டு. அதுதன் மதத்தை விட்டு வேறு மதத்திற்குப்போய்விடுவது என்று வேண்டுமானாலும் நீங்கள் சொல்லலாம். ஆனால் அப்படி மாறிவிடுவதற்குள்ள பாத்தியத்தை நீங்கள் அபகரித்துவிட முடியாது. கோவிலுக்கு தரிசனத்துக்காகப் போகிற எல்லோரும் சேர்ந்து தங்களுக்கு இஷ்டப்பட்டவர்களை உள்ளே சேர்த்துக் கொள்ள என்ன ஆட்சேபமிருக்க முடியும். அப்படிச் சேர்த்துக்கொள்வது அந்தக் கோவிலைப்பற்றிய ஆகமத்திற்கு விரோதமாயினும், அவர்களைத் தடுக்கக் கூடியது ஒன்றுமில்லை. ஜனங்களிடமிருந்து அபகரிக்கப்பட்டிருக்கக் கூடாத ஒரு பாத்யதை அவர்களுக்கு மறுபடி கொடுப்பதில் மதசம்பந்தமான ஆக்கிரமிப்பு எதுவுமில்லை. தரிசனத்துக்குப் போகிற ஜனங்கள் எல்லோரும் சேர்ந்து தங்களுக்கு இஷ்டப்பட்டவர்களைச் சேர்த்துக் கொள்ளலாமென்பதை ஒப்புக் கொண்டால் அவர்களில் பெரும்பாலோர் அப்படிச் செய்யலா மென்பதையும் ஒப்புக் கொள்ளத் தான் வேண்டும். ஆனால் சிறு பான்மையோர் தனியாகத் தரிசனம் செய்ய இஷ்டப்படின், அதில் அவர்கள் குறுக்கிடக் கூடாது. ஸ்ரீஜகத்குரு எந்த மதத்தினரோ அந்தமதத்தினரே தாங்கள் என்றும், அவர் நம்பும் சாஸ்திரங்களையே தாங்களும் நம்புகிறதாகவும் சொல்லிக் கொள்ளும் சீர்திருத்தக்காரர்களை சனதன தர்மத்திலிருந்து நழுவி விட்டவர்கள் என்று அவர் சொல்வது சரியல்ல. இந்த மசோதாக்களை நிறைவேற்றுவது சட்ட விரோதமான காரியமென்று எப்படிச் சொல்லமுடியு மென்பது எனக்குத் தெரியவில்லை. இப்படி ஸ்ரீ ஜகத்குருவின் கடிதம் ஆட்சேபகரமாக இருப்பதுபோல, திரு. ரங்கய்யரின் கடிதமுமிருக்கிறது. மலையாளத்தில் இந்த ஜனங்களின் அபிப்பிராயம் மசோதாக்களுக்கு விரோதமாக இருப்பதாகவும், ஹரிஜனங்கள்ஆலயங்களுக்குள் புகுவதற்கு விரோதமாக இருப்பதாகவும் அவர் நிச்சய புத்தியுள்ளவராக இருப்பதுபோல் நான் இல்லை. குருவாயூர் விஷயமாக அடுத்த ஸர்வஜன வாக்கு அப்படி நினைப்பதற்கு இடங்கொடுக்கவில்லை. நேர் விரோதமான அபிப்பிராயத்தை அது ஆதரிக்கிறது. மலையாளத்துக்குப்போய் நேரில் பார்த்தவர்கள் பொதுஜன அபிப்பிராயம் ஆலயப்பிரவேசத்துக்கு விரோதமாக இருக்கவில்லை என்று எனக்குச்சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இரண்டு கட்சியினரின் மேல்பார்வையில் ஸர்வஜன வாக்கெடுத்து அதன்படிபோகிறதென்று இருகட்சியினரும் ஒப்புக்கொண்டுவிடின் அந்தந்தக்கோவிலைப்பற்றி ஏற்பாடு செய்துகொண்டு விடலாம்! என்னிடத்தில் திரு. ரங்கய்யருக்குக் கண்மூடித்தனமான அன்பிருப்பதால் ஒரு தரப்பான உதாரணத்தைச்சொல்லிவிட்டார். புத்தருடன் ஒப்பிடப் படுவதற்கு எனக்கு எவ்வித தகுதியுமிருப்பதாக நான் நினைக்கவில்லை. நான் ஒரு சாதாரண மனிதன் என்றே நான் நினைக்கிறேன். மனித ஜாதிக்கு சுபாவமாகவுள்ள பிசகுகளெல்லாம் நானும் செய்யக்கூடியவன் என்றே நினைக்கிறேன். சத்தியத்தைத் தேடுகிறவனே நான். இன்னொரு காரணத்தை உத்தேசித்தும் இந்த உதாரணம் தப்பானது. புத்தர் நாஸ்திகர் என்று சநாதனிகள் சொல்வார்கள். வேதங்களை அவர் பிரமாணமாக ஒப்புக்கொள்ள வில்லை என்றும். வேதங்கள் ஈசுவரனால் கொடுக்கப்பட்டவை என்பதை அவர் நம்பவில்லை என்றும் அவர்கள் சொல்வார்கள். உண்மையில் அவர் நாஸ்திகர் என்றும், வேதங்களை நம்பவில்லை என்றும் நான் சொல்லவில்லை. அவர்எப்படிப்பட்டவர்என்பது இங்கு நமக்கு முக்கியமல்ல. நானும் நாஸ்திகனென்றும், வேதத்தை நம்பாதவன் என்றும் கருதப்படின், நவீன காலத்தில் ஏற்பட்டதாகிய தீண்டாமை என்பது சாஸ்திரங்களின் மொத்தக் கருத்துக்கு விரோதமென்று அதை ஒழித்துவிடும்படி ஹிந்துக்களைக்கேட்க எனக்குப் பாத்யமிராது.

## ஹிந்து விவாகரத்து மசோதா.

புதிய டில்லி, பிப், 3—

ஸர் ஹரிசிங் கவர் கொண்டுவந்த ஹிந்து விவாக ரத்து மசோதா ஒரு அதிகப்படி வாக்கினல் பொருக்குக் கமிட்டியின் பரிசீலனைக்கு அனுப்பப்பட்டது. இது சம்பந்தமாக ஸர் கவருக்கு ஏற்பட்ட வெற்றியால் தேசியக் கட்சியைச் சேர்ந்த 5 வைதீக மெம்பர்கள் அக்கட்சியிலிருந்து ராஜிநாமாச் செய்து விலகிவிட்டார்களென்று இந்தியா சட்டசபை மெம்பர்களுக்குள் நடக்கும் சம்பாஷணையால் தெரியவருகிறது. சமூக-மத சம்பந்தமான விஷயங்களில் ஸர் கவர் கொண்டுள்ள அபிப்பிராயங்களை ஆட்சேபிப்பதற் கறிகுறியாக இவ்வாறு செய்திருக்கின்றார்களென்று பேசிக்கொள்ளப்படுகிறது. அவர்களை மீண்டும் தேசியக்கட்சியில் சேரும்படி செய்வதற்காக திரு. ஷண்முகம் செட்டியாரும் சார்தாவும் ஏற்பாடு செய்து வருகின்றனர்.

## திரு. ராஜாவுக்கு அனுமதி.

சென்னை சட்டசபையில் டாக்டர் சுப்பராயன் கொண்டுவரவிருந்தது போன்ற ஒரு மசோதாவை இந்தியச் சட்டசபையில் கொண்டுவர ராவ்பகதூர் ராஜாவுக்கு அனுமதி கொடுக்கப்பட்டுவிட்டது.

## மேயரின் உபதேசம்.

சென்ற ஞாயிற்றுக்கிழமை கெம்மண்டைன் என்றவிடத்தில் ரங்கூன் புதிய மேயராகிய டாக்டர் ஆர். எஸ். டுகல் என்பவருக்கு ஆந்திரர்களால் ஒரு உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுக்கப்பட்டது. அதற்குப் பதிலளிக்கையில் மேயர் பர்மாவில் வசிப்பவர்களெல்லாம் பர்மியர்களே யென்றும், பொதுவாக எல்லோரும் பர்மாவின் புனருத்தாரணத்திற்காகப் பாடுபட வேண்டு மென்றும் கூறினர். அதோடு எல்லோரும் ஒத்துழைக்கவும் சகோதர உணர்ச்சியைக் காண்பிக்கவும், சிநேகம் காண்பிக்கவும் வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்.

## ஸ்ரீமதி காந்தி விசாரணை.

### ஜாமீனில் வெளிவர மறுப்பு

போர்சாத், பிப்ரவரி, 7—

போர்சாத் முதல் வகுப்பு மாஜிஸ்டிரேட் முன்பாக இன்று ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தி மீதும், மற்றும் 6 பெண்கள் மீதும் தொடர்ந்துள்ள வழக்கு விசாரணை ஆரம்பமாயிற்று. கோர்ட்டில் எள் விழ இடமின்றி ஜனங்கள் கூடியிருந்தனர்.

காதனு போலீஸ் ஸ்டேஷனைச்சேர்ந்த போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் ஸ்ரீ. அமார் அலி வாலியிா பிராசிகூஷன் தரப்பில் கொடுத்த வாக்கு மூலத்தில் குறிப்பிட்டதாவது:—

போர்சாத் தாலுக்கா காங்கிரஸ் கமிட்டியை சட்டவிரோதமான ஸ்தாபனமென்று ஏற்கெனவே சர்க்கார் அறிவித்துள்ளனர். ஷெ ஸ்தாபனத்தின் ஆதரவில் போர்சாத் தாலுகாவிலுள்ள பல காங்கிரஸ் உபக்கமிட்டிகளின் 'சர்வாதிகாரிகள்' மகாராட்டைராஸ் கிராமத்தில் கூட்ட எதிரிகள் முயற்சித்தனர். மாலை சுமார் 9-மணி இருக்கும். சுமார் 100 பெண்களடங்கிய ஓர் ஊர்வலத்திற்கு எதிரிகள் தலைமை வகித்து தேசிய கோஷங்கள் செய்துகொண்டு நடத்திவந்தனர். அவர்களனைவரும் பலவித "சர்வாதிகாரிக"ளுக்குரிய அடையாளங்களைத் தரித்துக்கொண்டிருந்தார்கள்.

ஸ்ரீமதி காந்தி மகாநாட்டுத் தலைவருக்குரிய அடையாளத்தை அணிந்திருந்தார். எதிரிகளை நான் கைது செய்து ஊர்வலத்திலிருந்த மற்றவர்களைக் கலைக்குமாறுஉத்தரவிட்டேன். ஸ்ரீமதி காந்தியைத் தவிர இதர எதிரிகள் பல உபக்கமிட்டிகளின் 'சர்வாதிகாரி'களென்ற முறையில் கிராமாந்திரங்களில் சுற்றுப்பிரயாணம்செய்து கிராம வாசிகளை சட்டமறுப்பு இயக்கத்தில் சேருமாறும், சர்க்கார் சட்டங்களை எல்லாம் மீறுமாறும், சர்க்காருக்குத் தீர்வைகள்முதலியனசெலுத்தவேண்டாமென்று கேட்டுக்கொண்டும் சட்ட விரோதமான காரியங்களைச் செய்த வந்திருக்கின்றனர்."

எதிரிகள் தாங்கள் "குற்றவாளிகள் அல்ல" வென்று கூறினர். விசாரணையில் அவர்கள் கலந்துகொள்ளமறுத்து தேச சேவையே தங்கள் தொழிலென்றும் கூறினர்.

கோர்ட்டார் ஸ்ரீமதி காந்திமீது கிரிமினல் திருத்தச் சட்டத்தின் 17வது செக்ஷன் 1வது பிரிவுப்படியும் மற்ற எதிரிகள் மீது ஷெ சட்டத்தின் 17வது செக்ஷன் 2வதுபிரிவுப்படியும் குற்றப் பத்திரிகை தயாரித்துப் படித்தார்.

ஸ்ரீமதி காந்தி, மகாநாட்டின் தலைவி என்ற முறையில் நானேபெரிய குற்றம் செய்திருக்கிறேன். எனவே இதர பெண்கள்மீது சுமத்தப்பட்டுள்ள குற்றங்களை என் மீதும் சுமத்த வேண்டுமென்றார்.

தீர்ப்பளிப்பதை கோர்ட்டார் ஒத்தி வைத்துள்ளார்.

ஒரு எதிரியின் கணவர், தன் மனைவியை ஜாமீனில்விடுதலைசெய்ய வேண்டுமென மனுச்செய்து கொண்டார். அப்பெண்ணை கோர்ட்டார் இவ்விஷயமாகக் கேட்டதில், ஜாமீனில் விடுதலையடைய அவர் மறுத்துவிட்டார்.

## திருச்சி முனிசிபாலிடி.
### வைஸ்சேர்மன் தேர்தல்.

திருச்சி, பிப்ரவரி, 5—

நேற்று மாலை திருச்சி முனிசிபல் சபைக்கூட்டம் நடைபெற்றது. வைஸ் சேர்மன் பதவியை ஸ்ரீ டி. வி. நல்லுசாமி பிள்ளை ராஜிநாமா செய்துவிட்டபடியால் அந்தஸ்தானத்துக்கு ஸ்ரீ யூ. ராமசாமி அய்யரை ஏக மனதாகத் தெரிந்தெடுத்தனர்.

## அண்ணாமலை நகர்.

படப்பிரதிஷ்டை:—கவிஞர் திலகம் சி. சுப்பிரமணிய பாரதியாரின் உருவப்படத்தை பாரதி கவிப் பயிற்சி சங்கத்தின் ஆதரவில் சென்ற வியாழக்கிழமை யன்று பிரதிஷ்டை செய்யப்பட்டது. அப்பொழுது 500 ஜனங்கள் முழுமி யிருந்தனர். கூட்டம் ஓரியண்டல் ஹாலில் நடைபெற்றது. சுவாமி விபுலானந்தா தலைமைவகித்தார். திரு. எஸ். சத்தியமூர்த்தி அய்யர் படத்தைத் திறந்துவைத்தார்.

ஸ்தாபகர் தினம்:—அண்ணாமலை சர்வகலாசாலை ஸ்தாபகர் தினம் பிப்பிரவரி 10-உ கொண்டாடப்படும். சென்னை யரசாங்கமந்திரி கனம் திவான்பகதூர் எல். குமாரசாமி ரெட்டியாரவர்கள் தலைமை வகிப்பார்கள்.

அண்ணாமலை பார்க்:—சிதம்பரத்தில் அண்ணாமலைபார்க்கும் அண்ணாமலை ஹாலும் 10உ யன்று காலை 8 மணிக்கு மந்திரி கனம் குமாரசாமி ரெட்டியாரால் திறக்கப்படும்.

ஒரு நிருபர்.

## இந்தியாவுக்கு பர்மா அரிசி.
### ஜப்பான் கப்பல் போட்டி.

கொழும்பு, பேப் 8—

ரெங்கூனிலிருந்து இந்தியத் துறைமுகங்களுக்கும், இலங்கைக்கும், கப்பல் ஒப்பந்தக்களின்படி இப்பொழுதுள்ள திட்டங்களுக்கு நூற்றுக்கு ஐம்பதுவிகிதம் கட்டணத்தில் குறைவாகஅரிசியைஇறக்குமதிசெய்வதற்கு ஜப்பானிய கப்பல் உத்தேசித் திருப்பதாகத் தெரிகிறது. இந்த திட்டம் வெற்றி பெறுமேயாகில் இதுவரை இறக்குமதி யாகியுள்ள அரிசியைக் கூடியவரை மலிவாகவே விற்க ஏற்பாடு செய்யவேண்டியிருக்கும். ஆனால் கொழும்பில் லார்டு இன்ச்கேப் இருப்பதானது அக்கரையையுண்டாகச் செய்தது. 7-2-33உ அன்று பகல் கொழும்பு அரிசி வியாபாரிகளில் பிரபலஸ்தர்களான இருவர் அவருக்கு ஓர் விருந்தளித்த பொழுது, கப்பற் கட்டணங்கள் உயர்த்தப்பட்டதாகத் தெரிகிறது.

## ஸ்ரீரங்கம்.
### விபசாரத் தடைச்சட்ட அமுல்.

ஸ்ரீரங்கத்தில் விபசாரத் தடைச் சட்டம் தற்போது அமுலில்கொண்டு வரப்பட்டிருக்கிறது. அச் சட்டத்திலுள்ள விதிகளை அனுஷ்டானத்தில் கொண்டுவர ஸ்ரீரங்கம் போலீசார் பெரு முயற்சி செய்து வருகின்றனர். பல வீடுகளில் குடியிருந்துகொண்டு விபசாரம் செய்து வருபவர்கள் வீடுகளைக் காலி செய்து வருகின்றனர் என்று தெரிகிறது.

## ஸ்ரீ. கே. பி. லெக்ஷ்மணராவ்
### ஹைகோர்ட்டு நியமனம்.

திருநெல்வேலி ஜில்லா நீதிபதி திவான்பகதூர் கே. பி. லக்ஷ்மணராவ், சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜாக நியமிக்கப்பட்டிருக்கிறார். அவருக்குப் பதில் திருநெல்வேலி ஜில்லா நீதிபதியாக ஸ்ரீ. பி. வெங்கட்ட சுப்பாராவ் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

## கவர்மெண்டின் பேரில் டிகிரி செய்யப்பட்டிருக்கிறது.

மிஸ்டர், டிகோர் கொண்டுவந்த கேஸில் நாகபூர் சப். ஜட்ஜ் தீர்ப்பு செய்ததாவது:-மிஸ்டர் டிகோருடைய மனைவி சட்ட மறுப்பு இயக்கத்தில் சேர்ந்த குற்றத்திற்காக, சட்டவிரோதமாக அவர் சொத்துக்களைக் கைப்பற்றியதற்கு கவர்மெண்டின் பேரில் ரூ.200-க்கு டிகிரி செய்துவிட்டார். மேற்கண்ட தொகை இரண்டு மாதத் தவணையில்செலுத்த வேண்டு மென்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

# பர்மாவில் வியாபாரமந்தம்.

(நமது நிருபரிடமிருந்து)

ரங்கூன், ஜன, 31—

தற்போதேற்பட்டிருக்கும் வியாபார மந்தத்தாலும் நெல்லின் விலை விழ்ச்சியாலும் பொதுவாக எல்லா பர்மிய நிலச்சுவான் தார்களும், விசேஷமாக அந்நாடு முழுதும் ஏராளமான கிராமங்களையுடைய நாட்டுக்கோட்டை செட்டியார்களும் 1932-33 வருடத்து நிலவரியை கட்டுவதில் அமிதமான கஷ்டத்தையடைந்து வருகின்றார்கள்.

ஆதலால் நாடுமுழுதும் பொதுக் கூட்டங்கள் கூட்டப்பட்டு, மக்கள் அரசாங்கத்தினிடம் நிலவரியை நூற்றுக்கு ஐம்பது விகிதம் குறைக்கவேண்டு மென்றும், தற்போது ஏற்பட்டிருக்கும் வரி நெல்விலை மிகவும் உயர்ந்து நூற்றி ஐம்பதும் இருநூறுமாக 100கூடைக்கு (11) இருந்தகாலையில் திட்டம்வகுக்கப்பட்ட தென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றி அரசாங்கத்துக்கு அனுப்புகின்றார்கள். இப்போது நெல்விற்கும் விலை 70ம் 80ம் ஆகும்.

சென்ற இரண்டு வாரத்திலும் நிச்சுவான் தார்களின் இரு தூதுக் கோஷ்டியார் கவர்னரையும் ரிவன்யூ கமிஷனரையும் பேட்டிகண்டு, நிலவரி வசூலை ஜுன்மாதம் வரையிலும் ஒத்திவைக்க வேண்டு மெனறும், நிலவரியை நூற்றுக்கு 50 விகிதம் குறைக்க வேண்டு மென்றும், வேளாண்மை செய்வோருக்கு கடன் கொடுத்துதவ வேண்டு மென்றும் எடுத்துக் கூறினார்கள்.

கவுன்ஸில் காரியதரிசிக்கும் ஏராளமான தீர்மானங்களும் அனுப்பப்பட்டிருக்கின்றன. அவையொவ்வொன்றும்நிலவரியைக்குறைப்பதுபற்றியும், தாதமடாவரிகளைப் பற்றியும் செய்கோன் சையாம் நெற்கள் இறக்குமதியைத் தடைசெய்வது பற்றியுமாகும். சமீபத்தில் கூடப்போகின்ற சட்டசபைபெப்ரவரி 9-ந் தேதி முதல் மார்ச்மாதம் முதல் வாரம் வரையிலும் நடைபெறும். அப்போது நிலவரியும் நெல்விலையும் சம்பந்தமான பிரச்னைகளே கௌன்சிலின் கவனத்தைப்பற்றி நிற்கு மென்று சொல்லப்படுகிறது.

1931-ம் வருடம் இன்சின் ஜில்லாவில் பெருவெள்ளத்தால் இத்தகைய ஒரு நெருக்கடி ஏற்பட்டபோது அரசாங்கம் ஏழை நிலச்சுவான் தார்கட்கு ஒருலட்சம் வரையிலும் கடன்கொடுத்து உதவிசெய்தது இவ்வருடமேற்பட்டிருக்கும் நெருக்கடி மிகக் கடுமையானதாகும். ஆதலால் கடன் வாங்கியவர்கள் திருப்பிக்கொடுக்க வழியின்றித் தவிக்கிறார்கள். இப்போது அரசாங்கத்திற்கு 80 ஆயிரம் முதல் 90 ஆயிரம் வரையிலும வசூலிக்கவேண்டியிருக்கிறது. எனவே அரசாங்கத்திற்குச் சொந்தமாக இன்சின் ஜில்லாவிலிருக்கும் நிலம் ஏராளம்.

தற்போது அரசாங்கம் கஷ்டமான நிலைமையிலேயே இருக்கின்றதென்றாலும் அது ஒரு நடுநிலைமையான வழியைக் கண்டுபிடிக்கவில்லையானால் பர்மாவின் எதிர்காலம் மிகவும் மந்தமானதாகவே யிருக்கும்.

### பத்திரிகைகள் அபிப்பிராயம்.

இத்தகைய நிலைமையைப்பற்றி பெப்ரவரி 1ந்தேதி வெளியான ரங்கூன் டைம்ஸ் எழுதுவதாவது:— நெலின் விலை மிகவும் கீழாகிப்போய் விட்டது. ஜில்லாக்களில் அதனால் தரித்திரம் தலைகாட்டுகின்றது. இனி நமது நாட்டார் கிழ் தேசத்து யுத்தங்களையும் பஞ்சத்தையும் நெதாலைகளையும் நம்பி வாழமுடியாது.

### பிரிவினையும் வியாபாரமும்.

சென்டு ஆண்ட்ரூஸ் தினத்தில் நடைபெற்ற அரசப் பிரதிநிதியின் பிரசங்கத்தைப்பற்றிக் குறிப்பிட்டு பர்மாவிலுள்ள ஒரு ஐரோப்பிய சங்கம் இந்தியா பிரிக்கப்பட்டால் விசேஷமான வரிகள் விதிக்கப்படுமா வென்று பர்மா கவர்னரிடம் கேட்டபோது அவர் வியாபார "கண்வன்ஷன்" ஒன்று ஏற்படுத்தினாலல்லாது தற்போதுள்ள வரியே நிலைபெற்றிருக்கு மென்று கூறினார்.

### இலங்கையில் பர்மிய நெல்.

சென்ற சில தினங்களாக இலங்கைக்கு இறக்குமதி யாகும் பர்மா நெல்லின் அளவு ஏராளமாகும். சிலோன் டைம்ஸ் பத்திரிகைச் செய்தியால் லட்சம் சாக்குகட்கு மேலாக அரிசி இறக்குமதியாகி யிருக்கின்றதென்றும், இன்னும் 30 ஆயிரம்சாக்குகள் ஜனவரி 19-ந் தேதி இறக்குமதியாகக் கூடுமென்றும் தெரிகிறது.

### சுதேசி தையலியந்திரம்.

இப்போது இந்தியாவில் 85 லட்சம் ரூபாய்க்கு தையல் மெஷின்கள் (இயந்திரங்கள்) இறக்குமதி செய்யப்படுகின்றன. இதனை முன்னிட்டு கல்கத்தாவில் சுதேசி தையலியந்திரங்கள் செய்திருக்கின்றார்கள். இது குணத்தினால் எவ்வழியிலும் விதேச இயந்திரங்கட் கிளைத்ததல்ல வென்று தெரிகிறது.

### தவாயில் ஜப்பானியர் மீன் படகுகள்.

தவாய் 26—

தவாயிலிருந்து நிருபர் ஒருவர் தந்திமூலம் அறிவிக்கும் செய்தியொன்றில் தவாய் துறைமுக எல்லையில் உள்ள மோஸ்கோஸ் தீவுகளில் ஜப்பானிய மீன் பிடிக்கும் படகுகள் திரிவதாகச் செய்தி கிடைக்கப் போலீசார் தீவிரமாக விசாரிக்க முற்பட்டனர். அதன்மேல் போலீசார்சென்று பார்க்க மூன்று ஜப்பானிய மீன்பிடிக்கும் படகுகளும் ஒரு மோட்டார் போட்டும் கண்டு, படகிலும் போட்டிலும்மிருந்த ஒன்பது ஜப்பானியர்களையும் கைதுசெய்து மாங்மாகான் கொண்டுவந்துள்ளனர்.





## நோட்டீஸ்.

சிவகெங்கை டி. முன்சீப் கோர்ட்டு.

1932ஞ O. S. No. 418.

சிவகெங்கை தாலூகா நடராஜபுரத்திலிருக்கும் லெக்ஷ்மணன் செட்டியார் குமாரர் மைனர் குள. கா. லெ. சுப்பிரமணியன் செட்டியார் ஷை மைனரின் தாயும் அடுத்த சிநேகிதியுமான கண்ணம்மை ஆச்சி மூலம். வாதி.

ஷை தாலூகா ஷையூரிலிருக்கும் வீரப்ப செட்டியாராகிய சின்னய்யா செட்டியார் குமாரர் ஆ. வீர. முத்துராமன் செட்டியார் and 18 others பிரதிவாதிகள்.

வாதி என்பவர் 1 முதல் 17 வரை பிரதிவாதிகள் பேரில் பிலாமிச்சம்பட்டி கண்மாய்க்கு பிறுஅுடன் தாக்கல் ஸ்கெச்சில் கண்ட A B C E E1 E2 குழக்கால்களை ஷை 1 முதல் 17 வரை பிரதிவாதிகள் அழித்து கெடுதி செய்திருப்பதற்காக சாஸ்வத இன்ஜங்க்ஷன் பரிகாரம் கோறி பிருது செய்திருப்பதில் சக்கரவர்த்திப்பட்டி கிருமத்தில மேல்வாரதார்களுக்காக 1 முதல் 8 வரை பிரதிவாதிகளை ஷை கிருமத்துக்கு Representativeகளாக நியமித்துக்கொள்ள அனுமதி கொடுக்கவேணுமாய் I. A 1112/32ல் மனுக் கொடுத்திருக்கிறபடியால் ஷை மனுவின்பேரில் ஆக்ஷேபணைக்காக 1933ஞ மார்ச்சுமீ 20உ வாய்தா ஏற்பட்டிருப்பதில் ஷை வாய்தாவன்று ஆக்ஷேபணையுள்ளவர்கள் நேரிலோ வக்கீல்மூலமோ தெரிவித்துக்கொள்ளவேண்டியது. தவறினால் ஷை மனுவானது ஒருதலைபக்ஷமாக தீர்மானமாகுமென்பதை இதன்மூலம் எல்லோருக்கும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

Sivaganga, 7-2-1933. } V. SUNDARAM. Pleader.

## நோட்டீஸ்.

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு.

O. S. No. 284 of 28.
I. A. 349 of 32.
I. A. 64 of 1933.

எழுவங்கோட்டை தாலூகா ஓ. சிறுவயலிலிருக்கும் நாகப்ப செட்டியார் குமாரர் முத்தையா செட்டியார் 1 } வாதி. (died)

ஷை தாலூகா ஷையூரிலிருக்கும் ஷையாரின் சம்சாரமும் வார்சுமான சீதை ஆச்சி } வாதி வார்சு.

வடுகனாத பிள்ளைவகையறா பிரதிவாதிகள்.

ஷை நிம்பரில் வாதிதரப்பில் பைனல் டிக்கிரி பெறமனு தாக்கல்செய்ததில், வாதி 23-11-32உயில் இறந்துபோய் ஷையாரின் அபிபக்த மகன் சாமினாதன் செட்டியார், தற்காலம் இருக்கிறயிடம் தெரியாததாலும், ஷையார் வெளியேறிப்போய் 9 10, வருஷத்துக்கு மேல் ஆகிவிட்டதாலும், வாதியின் சம்சாரமான சீதை ஆச்சியை ஷை நிம்பரில் வார்சாகச் சேர்க்கவேணுமாய் மனு தாக்கல்செய்து வாய்தா 24-2-33உ ஏற்பட்டிருக்கிறது. ஏதாவது ஆக்ஷேபணையிருந்தால் 24-2-33உயில் பகல் 10 மணிக்கு கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக் கொள்ளலாம்.

தேவகோட்டை, 4—2—33. } P. ராமசாமி அய்யர், வக்கீல்.

## புதுக்கோட்டையில் இரட்டைக் கொலை.

### காதலர்களுக்குள் மனஸ்தாபம்.

புதுக்கோட்டை, பிப். 4-

நேற்றிரவு சுமார் 8 மணிக்கு புதுக்கோட்டை டவுன் வடக்கு நான்காம் வீதியில் ஓர் கோரமான கொலை நடந்தது. சிலநாளாக ஒரு வலையனும் கள்ளர் சமூகத்தாரைச்சேர்ந்த பெரியநாயகி என்னும் ஸ்திரீயும் சேர்ந்து மேற்படி வீதியில் ஓர் வாடகை வீட்டில் இருந்துவந்தனர். சுப்பன் என்ற வலையனுக்கு வயது 25. ஷைஸ்திரீக்கு 22. இருவரும் அரிமளத்தைச்சேர்ந்தவர்களாம். சென்ற அமாவாசையன்று இருவருக்குள் சில மனஸ்தாபங்கள் ஏற்பட்டு அவள் காரைக்குடிக்கு ஓடிப்போனதாகவும், பிறகு ஷை வலையன் அவளைத் திரும்ப இம்மாதம் 2ந்தேதி அழைத்துவந்ததாகவும் தெரிகிறது. பிறகு அவர்களுக்குள் என்ன நடந்ததோ தெரியவில்லை. நேற்று இரவு சுமார் 8 மணிக்கு ஓர் அரிவாளால் தன் வைப்பாட்டியாகிய ஷை ஸ்திரீயை வெட்ட ஆரம்பித்தபோது அவள் கூச்சலிட, ஷை குடியிருப்பு வீட்டு சொந்தக்காரரான ராமசாமி சேர்வை உடனே வீட்டுக்குள் நுழைய அவரை 2 இடங்களில் வெட்டி காயப்படுத்தி அவர் அலரிக்கொண்டு வெளியில் ஓடிவந்து போலீசுக்கு தகவல் அனுப்பினார். உடனே நெருக்கதவை தாழ்ப்பாள் போட்டு மேற்படி ஸ்திரீயின் வலது கையை வெட்டி பின்னும் அனேக வெட்டுக்காயங்கள் அவள் தேகத்தில் உண்டாயினவாம். அவள் உடனே இறந்துவிட்டாள். அவள் பிரேதத்தை அவ்வீட்டின் கொல்லைப் பக்க தாவாரத்தில் இழுத்து எறிந்துவிட்டதாகத்தெரிகிறது. போலீசார்களும் உடனே வந்து ஸ்திரீயின் பிரேதம் ஷை இடத்தில் கிடப்பதைப் பார்த்துவிட்டு ஷை வலையன் ஓடிப்போனதாக எண்ணி அவனைக் கைதிசெய்வதற்காக இரவு முழுதும் தேடித்திரிந்தார்கள் எனவும் தெரிகிறது. ஆனால் இன்று காலையில் ஷைஸ்திரீயின் பிரேத விசாரணை நடத்த எத்தனித்ததும் ஷை வலையன் கழுத்தில் சுருக்குப் போட்டுக்கொண்டு தொங்கிக்கொண்டிருந்ததை அதே வீட்டில் ஒரு உள்ளிலிருந்து போலீசார் கண்டு பிடித்து பிறகு இரு பிரேதங்களைப்பற்றியும் விசாரணைசெய்து அடக்கம் செய்துவிட்டனர். இருவர்களுக்கும் ஓர் குழந்தை எட்டு மாதத்திலிருக்கிறதாக தெரிகிறது. அக்குழந்தையை வளர்ப்பதற்கு வேறு யாரோ ஒருவரிடம் கொடுத்திருக்கிறதாகத் தெரிகிறது. நாகரில் இது விஷயமாக விசேஷ பரபரப்பு ஏற்பட்டிருக்கிறது.—(சுதேசமித்திரன்.)

## பீஹாரில் விதவைகளின் புனர்விவாகங்கள்.

### சென்ஸஸ் ரிப்போர்ட் தேரிவிப்பது.

பீஹார் மாகாணத்தில் விதவைப் புனர்விவாகம் நாளாசரியாக சர்வசாதாரணமாக வளர்ந்து கொண்டிருக்கிறது.

சென்ற சென்ஸஸ் ரிப்போர்டிலிருந்து முடிவடைய வேண்டியதாவது:-

1911-ம் ஒவ்வொரு ஆயிரம் இந்து பெண்களில் விதவைகள், 10-15வயதுகளில் 27-ஆும் 1921-ல் 26-க்கும் 1931-ல் 15-ம்.

15 வயதிலிருந்தும் 20 வயதுக்குள் 1911-ம் ஞ 45,ம் 1921 ஞ 49-ம் 1931-ம் ஞ 36.

20 வயது25-க்குள் 1911-ம்ஞ66. 1921-79 1931-ம் ஞ 54 மட்டுமே.

## தேங்காய்விலை இறக்கம்.

வெளிநாடுகளிலிருந்து ஆர்டர் வராத காரணத்தாலும், பொருளாதாரக்கஷ்டத்தாலும் கொச்சி சமஸ்தானத்தில் தேங்காயின் விலை வீழ்ந்துவிட்டதோடு ஏராளமாகக்குவிந்தும் கிடக்கின்றன. இதனால்மலபார் தேங்காய் வியாபாரிகளும் ருஷிகர்களும் அதிகமாகப் பாதிக்கப்பட்டிருக்கின்றார்கள். இந்த பரிதாபகரமான நிலைமையை, சிலோனிலிருந்து தாழ்ந்த விலைக்கு ஏற்றுமதியாகும் தேங்காய் பாதித்து நிலைமையை நெருக்கடியாக்குகின்றது.

எனவே கொச்சி நகரசபை சமீபத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்றி அதன் மூலம் இலங்கையிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் கொப்பரா எண்ணெய் ஆகியவற்றிற்கு அதிக வரிவிதிக்க முயலவேண்டு மென்று கேட்டிருக்கின்றது.

## மகாத்மாவின் மனைவியும் மற்றும் 6 ஸ்திரீகளும் கைதி.

கதானு, பிப். 4—

மகாத்மா காந்தியின் மனைவியான ஸ்ரீமதி கஸ்தூரிபாய் மற்றும் 6 ஸ்திரீகளுடன் சேர்ந்து போர்சத் தாலூகாவிலுள்ள ராஸ் என்ற கிராமத்தில் சர்வாதிகாரிகளது மகாநாடொன்றைக் கூட்ட பெப்ரவரி 4-ந் தேதி காலை முயன்றனர். அவர்கள் ராஸ்கிராமத்தைச் சேர்ந்த 100 ஸ்திரீகளைக் கூட்டிவிட்டார்கள். அவர்கள் எல்லோருமாக ஒரு தெரு மூலையில் கூடி காங்கிரஸ் கோஷங்களைச் செய்துகொண்டு ஊர்வலமாகப் புறப்பட்டபொழுது, நிலவரி கொடுக்காததற்காகப் பறிமுதல் செய்யப்பட்ட நிலங்களிலுள்ள பயிர்களைப் பாதுகாக்க ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஸ்பெஷல் போலீஸாரது தலைமை அதிகாரி இவர்களை மறித்து நிறுத்திவிட்டார். ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தியும், மற்றும் 6 ஸ்திரீகளும் கைது செய்யப்பட்டார்கள். மற்ற ஸ்திரீகள் கலைக்கப்பட்டனர். கைது செய்யப்பட்டவர்கள் விசாரணைக்காகப் போர்சாதிற்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

## ருஷியாவின் புதிய ஏற்பாடு.

### காவிதர்கள் செய்ய வேண்டுவதென்ன?

மாஸ்கோவிலிருந்து கிடைக்கின்ற ஓர் செய்தியால், சோவியத் சர்க்கார் கோர்கியில் ஒரு புதிய தொழிற்சாலையை நிறுவுவார்களென்றும் அதில் மனிதருடைய தலைமயிரினால் "பூட்ஸ்கள்" (மிதியடிகள்) தயாரிப்பார்களென்றும் தெரிகிறது. இதனை முன்னிட்டு இப்போது 400எடை தலைமயிர் சேமிக்கப்பட்டுள்ளது. பத்திரிகை செய்திகளால் 550 காவிதர் சாலைகள் 1500 டன் தலைமயிரை வருஷா வருஷம் கொடுக்குமென்று தெரிகிறது. ஒரு டன் தலைமயிர் கம்பளியோடு சேர்த்துச் செய்யப்பட்டால் ஆயிரம் ஜோடி மிதியடிகளாகுமாம். ஆகவே ருஷியா மற்றதேசங்களால் வீணாக்கப்படும் தலைமயிரை பதினைந்து லக்ஷம் ஜோடி பூட்ஸ்களாக மாற்றிப் பவுனாக்குகின்றது.

## தங்கப்பல் சுப்பைய்யா

(5-ம் பத்தக்கத் தொடர்ச்சி.)

வந்துவிட்டதா? நாயே இதோ பார் உன் ஊ! தென்றிசைக் கனுப்புகின்றேன்? என் கிளியைப் பிடிக்கவா முயன்ருய் பூனே" என்று அவனேடு போராடினேன. அவன் ஒன்றும் பேசாது என்னை எதிர்த்துத்தாக்குவது போலவும் மங்கம்மாளை பிடிக்க முயல்வது போலவும் பாசாங்கு செய்தான் நான் அவனைவிடாது போராடினேன். போராட்டத்தில் இருவரும் தோட்டத்தின் வெளியே வந்துவிட்டோம் அப்போது அவன்கால் என் காலில் தற்செயலாய் மோதிறறு. உடன் நான் கீழே குப்புரவிழுந்துவிட்டேன். கெட்டகாலத்தின் பயனுக நான்விழுந்தவிடம் கல்லாயிருந்ததால் என் பல்லில் பலமாயடித்து அதன் காரணத்தால் ஐந்து பற்கள் அப்படியே விழுந்துவிட்டன. கொஞ்சநேரமாக எனக்குப் பிரக்ஞையில்லே. என் முகம் முழுதும் சிதைந்துபோய்விட்டாற்போல் தோற்றிற்று. வாயிலிருந்து மடமடவென்று இரத்தமொழுக என் ஆடையெல்லாம்நனேந்தன.

சுமார் 20 நிமிஷத்திற்குப்பிறகு தலையைத் தூக்கிப்பார்த்தேன். எவரும் காணப்படவில்லே. இருள் ஒருவாறு வரத்தொடங்கிற்று. எனவே மெல்ல மெல்ல நான் வீட்டுக்குப் போனேன்.

இந்த சம்பவம் நடந்து ஒருமாதமாயிற்று. என் சூழ்ச்சி வெற்றியளிக்கவே யில்லே. வெற்றிக்குப் பதிலாக என் பல்போனது தான் மிச்சம். பல்லை நினேக்கும் போதுஎனக்கு மங்கம்மாளை நினேக்கவே மனம் வரவில்லே. என்ருலும் நான் போகப் போகக் கடந்த விஷயங்கள் மறந்துவிடு மல்லவா? நான். ஒரு உதவிசெய்யப் போனதில்வந்த அபாயம் பாராட்டத்தகுந்த தல்லவென்று என்னையே தேற்றிக்கொண்டேன். அப்பால் திருநெல்வேலியிலுள்ள ஒரு தங்க வைத்தியரிடம் சென்று பல்கட்டிக் கொண்டேன். இப்போதுஎன்னைபலர்

தங்கப்பல் சுப்பையா வென்கின்ருர்கள். ஆதலால் நான் மங்கம்மாள் மீது வைத்தகாதலால் கிடைத்தலாபம் 5 தங்கப்பல் தான் நஷ்டம் 25 ரூ வைத்தியர் கூலியும் மானமும்

இப்போது என்னை கிழவன் என்று பல பெண்கள் அழைத்து வருகின்ருர்கள். மங்கம்மாளும் கண்டால் குலுங்கக் குலுங்க நகைக்கின்ருள். ஒருவரேனும் பெண் தருவதாகவுமில்லே.



## இந்தியத் தங்க மெங்கே?

லண்டன் நாணய உற்பத்தி சாலேயின் உபத்தலேவரான சர். ராபர்ட் ஜான்சன் வெளியிட்டிருக்கும் வருடாந்த யாதாஸ்தில் "பவுன் ஸ்டெர்லிங், பிரெஞ்சு பிராங்குடனும் அமெரிக்க டாலருடனும் திண்டாடிக் கொண்டிருக்கும் பொழுது" ஸ்டெர்லிங்கிற்குத் தீவிரபக்கபலமாக நின்றுதவியது. இந்தியாவிலிருந்து ஏராளமாக ஏற்றுமதியாகிய தங்கமென்பதாகக் குறிப்பிடுகின்ருர்.

1931ம் வருஷம் செப்டம்பர் 21ல் இங்கிலாந்து தங்க நிர்ணயத்தை ரத்து செய்தவுடன், இந்தியாவிலிருந்து தங்கம் ஏற்றுமதியாக ஆரம்பித்துவிட்டது. அவ்வருஷக் கடைசிக்குள்ளாக 25,000,000 பவுன் பொறுமான தங்கம் இறக்குமதியானதாகவும் ஆகஸ்ட் மாதத்திற்குள்ளாக 61,000,000 பவுன் தங்கம் இறக்குமதி செய்யப்பட்டதாகவும், சர். ராபர்ட் குறிப்பிடுகின்ருர். அதற்கப்பாலும் தங்க இறக்குமதி அதிகரித்தது. சென்ற நவம்பர் மாதக்கடைசிக்குள்ளாக சுமார் 74,000000 பவுன் பொறுமான தங்கம் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகி விட்டது.

### தங்கக் கிடங்கு.

அநேக வருடங்களாகப் பிரிட்டிஷ் இந்தியா தங்கக் குவியல்களுக்கு இருப்பிடமாகக் கருதப்பட்டு வந்தது. 1873-ம் வருடத்திறகும் 1931ம் வருடத்திற்கும் இடையில் மாத்திரம் இந்தியாவில் 500,000,000 பவுன் முதல் 600,000,000 பவுன் வரை தங்கம் சேகரமாயிருக்குமென்பதாகமதிப்பிடப்பட்டிருந்தது. தங்கம் இப்பொழுது நாட்டைவிட்டு வெளியேற வேண்டியதின் முக்கிய தத்துவமும், இது காரணமாக இந்தியா பிரயோஜனமிலலாமல் நாணயங்களைச் சேகரிப்பது குறைந்துவிட்டதும் எவருக்கும் உற்சாகத்தை யளிக்குமென்பதில் தடையில்லே.

வருடந்தோறும் சராசரி 80,000,000 பவுன் தங்கம் உற்பத்தி செய்யப்படுகின்றது. சென்ற 1931ம் செப்டம்பர் முதல் இந்தியா ஏற்றுமதி செய்திருக்கும் தங்கமும் இதே அளவுள்ள தென்பது குறிப்பிடத்தக்கது. அன்றியும், இந்தியாவில் பெரும் பாலோர் தங்கத்தை நகைகளாகச் செயது வைத்திருக்கின்றனர், தங்க ஏற்றுமதி இவர்களை அதிகமாகப்பாதிக்கவில்லே.

"இந்தியப் பெண்கள் இன்னும் காப்புகள் மீதும் வளேயல்கள் மீதும் விருப்பமுடையவர்களா யிருக்கின்றனர். சுதேசி நகைகளை தங்கக்கட்டியாக உருக்கி விடுவார்களென்பதற்குரிய அறிகுறியுமில்லே"

### இங்கிலாந்தில் கிடைத்த தேவ்வளவு.

சென்ற செப்டம்பர் மாதக்கடைசியில் சர் ராபர்ட் தமது யதாஸ்தில் கையொப்பமிட்டார். அம்மாதம் முடிய இந்தியாவிலிருந்து பிரிட்டனில் இறக்குமதியான தங்க மதிப்பு 74,000,000 பவுன். அதே காலத்தில் இங்கிலாந்திலிருந்து கிடைத்த தங்கத்தின் மதிப்பு 7,000,000 பவுனேயாகும். இத்தொகை நகையைஉருக்கியதிலிருந்தும் நாணயங்களைக் கொடுத்ததிலிருந்தும் சேர்ந்தாகும். இங்கிலாந்தில் தங்கத்தைச் சர்க்காருக்குக் கொடுத்துவிட வேண்டுமென்ற எண்ணம் வெகு தீவிரமாய்ப் பரவியிருந்தபடியால் இப்பொழுது பிரிட்டிஷ் ஜனங்கள் கைவசம் சொற்பத்தங்க நாணயங்களே யிருக்குமென்பதாக சர். ராபர்ட் அபிப்பிராயப்படுகின்ருர். எது எவ்வாருயினும் இந்தியாவின தங்க ஏற்றுமதியின விசேஷம இன்னதென்பது சொல்லாமலே விளங்கும்.

### தங்க நாணயச் செலாவணி.

இன்னும் தங்க நாணயங்கள் பிரிட்டனில் ஊடாடுகின்றன. இது அயல்நாடுகளிலிருந்து பிரிட்டனுக்கு விஜயஞ்செய்கின்றவர்கள் கொண்டு செல்வதாகும். விசேஷமாக தென்னுப்பிரிக்காவிலிருந்து செல்லும் கனவான்களே தங்க நாணயங்களை அதிகமாக உபயோகிக்கின்றனர். தென்னுப்பிரிக்காவில தங்கம் தாராளமாகச் செலாவணியாகின்றது. ஆனல் [இப்பொழுது தங்க நாணயத்தை ரத்துசெய்து தங்கக்கட்டுப்பாடு செய்திருப்பது நேயர்களறிந்த விஷயம்.]

### நாணய உற்பத்திச்சாலே.

வர்த்தகத்தளர்வும் பொருளாதார நெருக்கடியும் சர்க்கார் நாணயஉற்பத்திச்சாலேயைப் பாதிக்காமல் விடவில்லே. 1931-ம் வருடத்தில் நாணய உற்பத்தி மிகக்குறைந்துவிட்டது. 1930-ம் வருஷம் 185,000,000 நாணயங்களையும், 1931-ம் வருஷம் 156,000,000 நாணயங்களையும் நாணயசாலே உற்பத்தி செய்திருக்கின்றது. அயல்நாட்டு அல்லது குடியேற்ற நாட்டு நாணய உற்பத்தியே பெருவாரியாகக் குறைந்துவிட்டது. 1930-ம் வருஷம் குடியேற்ற நாடுகளுக்காக 111,000,000 நாணயங்கள் உற்பத்திசெய்யப்பட்டன. ஆனல் 1931ல் தொகை 65,000,000 ஆகக் குறைந்துவிட்டது. இதில் 41,300000 நாணயங்கள் அந்நியநாடுகளுக்குமருமேனியாவுக்கும் 21, 750,000 லத்வியாவுக்கும் 2,250,000இராக்குக்கும் 17,350,000,உற்பத்தி செய்யப்பட்டன.

இவ்வருஷத்தில் அல்பேனியா, ஜுகஸ்லேவியா, ருமேனியா, லட்வியா, கௌட்டமலா முதலிய நாடுகளிலிருந்து நாணய உற்பத்தி செய்வதற்கு ஆர்ட்ர்கள் கிடைத்திருக்கின்றன.

### சமீப நஷ்டங்கள்.

1932-ம் வருஷத்திலிருந்து கவனித்தால் இரு வருஷங்களாகவே நாணயச் சாலேக்கு லாபமேற்பட்டிருக்கின்றது. 1928,-29 ஆகிய இவ்விரு வருஷங்களில மட்டும் லாபங்கிடைத்திருக்கின்றது.

நாணயச்சாலே 1872-ம் வருஷம் ஸ்தாபிக்கப்பட்டது. அன்று முதல் இதுவரை 36,439,253 பவுன்மொத்தலாபம் கிடைத்திருக்கின்றது. நஷ்டம் 1,940,726; ஆகவே நாணயச் சாலேக்கு இதுவரை 34,498,527 பவுன் லாபமேற்பட்டிருக்கின்றது.

தென்னுப்பிரிக்காவில் சமீப காலம்வரை தங்க நிர்ணயத்தை ரத்து செய்யாமலிருந்தது. அத்தேசத்திலும் அதை யடுத்துள்ள நாடுகளிலும் செலாவணியின் கஷ்டங்களை விளேத்து விட்டது. பிரிட்டிஷ் வெள்ளி நாணங்களும், தென்னுப்பிரிக்கா சர்க்கார் வெள்ளிநாணயங்களும் எல்லேப்புறத்திற்கு வெளியே கொண்டு செல்லப்படுகின்றது. ஏனெனில் அங்கு வெள்ளிக்கு அதிக தங்க மதிப்பிருக்கின்றது.

### ரோடீஷியாவின் சங்கடம்.

இது சம்பந்தமாக சர் ராபர்ட் கூறுவதாவது:—இது தென்னுப்பிரிக்க சர்க்காருக்கு வெகு வசதிக் குறைவை யுண்டுபண்ணுவதுடன், தென்ரொடீஷியாவில் நாணயங்களே இல்லாமற் செய்துவிட்டன. இம்மாதிரியான சங்கடங்கள் இனிமேல் ஏற்படாம லிருப்பதன் பொருட்டு ரொடீஷியா சர்க்கார் விசேஷ உபநாணயத்தை ஏற்படுத்த வேண்டியதா யிருக்கின்றது. இந்த நாணயங்கள் லண்டனில் உற்பத்தி செய்யப்படும்.

## லாகூரில் வெடிகுண்டு விபத்து.

லாகூர், பிப் 1—

இன்று ரஞ்சித்சிங் சமாதியில் திடீரென இரண்டு வெடிகுண்டுகள் வெடித்தன. இதனுல் பேர் போன கொள்ளேக்காரர் எனச் சொல்லப்படும் ஜக்கு என்பவர் அங்கேயே கொல்லப்பட்டார். அவரது தோழர்கள் எனச் சொல்லப்படும் இருவருக்குப் பலத்த காயம்பட்டிருக்கிறது. அவர்கள் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டார்கள். மற்றொருவர் குதிரை மீதேறி தப்பிவிட்டார். அவரைத் துரத்திப் பிடிக்க போலீஸார் முயற்சித்து வருகின்றனர்.

### தப்பியோடியவர் பிடிபட்டார்.

லாகூர், பிப் 2—

நேற்று வெடிகுண்டு விபத்து ஏற்பட்டதும் தப்பியோடிய ஒருவனைத் துரத்திச் சென்ற போலீஸார் நேற்றிரவு வெகுநேரம் கழித்து லாகூருக்குத் திரும்பினர். இருட்டில் ஆளேத் தேடமுடியவில்லே. பொழுதுவிடிந்ததும் சப் இன்ஸ்பெக்டர் மிஸ்டர் அலிஹுஸேன்ஷா தப்பியோடியவனேப் பிடிக்கச் சென்றார். மாலேயில் அவன் பிடிபட்டதாகச் செய்தி எட்டியிருக்கிறது. எவ்விதம் அவனைப் பிடித்தார்கள் என்ற விவரம் தெரியவில்லே. ஆனல் லாகூருக்கு 30 மைல் தூரத்திலுள்ள ஹெக்பூரா என்ற விடத்தில் அவன் பிடிபட்டதாக மட்டும் தெரிகிறது. வெடிகுண்டு விபத்தால் நேற்று இறந்தவன் ஜக்கு அல்லவென இப்போது தெரிகிறது. இறந்தவன் ஜக்கு கோஷ்டியைச் சேர்ந்த பிலு ஜாத்சிங் என்று பெயரிடப்பட்ட ஒரு தோட்டியெனத் தெரிகிறது.

## புது ஆலயப்பிரவேசம்.

சமீபத்தில் ஒன்றரை லக்ஷ ரூபாய் செலவுசெய்து வட கல்கத்தாவில் கட்டப்பட்ட ஹிந்து கோயில் பிப் 1ந் தேதி ஹரிஜனங்கள் உட்படவுள்ள எல்லா வகுப்பு ஹிந்துக்களுடைய உபயோகத்திற்காகவும் திறந்துவிடப்பட்டது.

## மதுரை சேதுபதி ஹைஸ்கூலில் தீ விபத்து.

மதுரை, பிப் 3—

பிப் 3ந்தேதிசேதுபதிஹைஸ்கூலில்ஒரு தீ விபத்து ஏற்பட்டு, வகுப்புகள் நடைபெறும் 3 கொட்டகைகள் நாசமாகி விட்டன. 300 ரூபா மதிப்புள்ள சாமான்கள் சேதமாயின. கான்ஸ்டேபில்கள் நெருப்பு எரிவதைப் பார்த்து உடனே தகுந்த ஏற்பாடுசெய்து தீப்பரவாமல் தடுத்தனர். தீப் பிடித்த காரணம் மர்மமாகவே யிருக்கிறது.





## செய்கோன் தைப்பூச விழா.

இந்நகர் தைப்பூச விழாவும் இவ்வருஷத்தில் ஏற்பட்டிருக்கும் பொருளாதார கஷ்டத்தை உத்தேசித்து சென்ற வருஷங்களைப்போல வீண் ஆடம்பரச்செலவுகள் இல்லாமலும் ஏனேயோர்கள் பார்த்து ஏளனம் செய்ய காவ்முழ அலகு காவிவஸ்திரத்தை தரித்துக்கொண்டு காவடியை தூக்கி தோளின்மீது வைத்து தெருக்களேச்சுற்றி வாராமலும் சுவாமி—வெள்ளி ரதத்தில் வீதியில் பவனி வருவதற்கு சர்க்காருக்கு வேறு அதிகப்பணம் கொடாமலும், இன்னும் இதுபோன்ற வீண் ஆடம்பரங்களை யெல்லாம் விலக்கி இவ்வாண்டில் மிகவும் சீர்திருத்த முறையில் தைப்பூச விழாவை கோவிலுக்குள்ளேகொண்டாடுவதென்று இவ்வூர் நகரத்தார்கள் பேசி முடிவு செய்திருக்கிருர்கள்.

[ஒரு நிருபர்]

## வேகுப்பட்டி அநுமார் உடற்பயிற்சி சாலே.

### திறப்புவிழா வைபவம்.

புதுக்கோட்டை அநுமான் உடற்பயிற்சி சாலேயின் ஐந்தாவது கிளை ஸ்தாபனம் தனவைசிய நகரங்களில் ஒன்ருகிய வேகுப்பட்டியில், திரு. சுப. அ. இராமநாதஞ் செட்டியாரவர்களின் பெரு முயற்சியால் ஆரம்பிக்கப்பட்டு புதுக்கோட்டை பால பீமஸாண்டோ உயர்திருவாளர் நடேச பிள்ளேயவர்களால் ஆங்கிரஸஞு தைமீ 18உ திறந்து வைக்கப்பெற்றது. அவ்வமயம் வலம்புரி அலர்மேலு பெண் கல்லூரி தலேமையாசிரியர் திரு. ப. இராமனுத பிள்ளே அவர்கள் தலைமையின் கீழ் பல அன்பர்களால் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெற்றன என்று காரியதரிசி எழுதுகிருர்.

## தனவைசிய இளைஞர் உடற்பயிற்சி மகாநாடு.

### கீழச்சிவற்பட்டி, பி. (அழகாபுரி) யில் நடைபெறும்.

தனவைசிய இளைஞர் உடற்பயிற்சி மகாநாட்டின் நிர்வாகக் கூட்டம் இத் தைமாதம் 15உ வெள்ளிக்கிழமை யன்று, கீழச்சிவற்பட்டி வேதபாடசாலேக் கட்டடத்தில் கூடிற்று. தனவைசிய நாட்டின் பலபகுதிகளிலிருந்தும் பல அன்பர்கள் விஜயஞ் செய்திருந்தனர். மகாநாட்டை வெளியூர்களில் நடத்த அன்பர்கள் ஏற்றுக் கொள்ளாததால் கீழச்சிவற்பட்டி அழகாபுரியிலே நடத்துவதென்று தீர்மானிக்கப் பட்டது. இருபத்தொரு அங்கத்தினர்கள் இம்மகாநாட்டின் நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர் என்று காரியதரிசி எழுதுகிருர்.

## சிங்கப்பூர் நாய்க்கு இங்கிலீஷ் சட்டம்.

சென்ற டிசம்பர் மாதம் 2-ந தேதி மாலே சிங்கப்பூர் போலீஸ் கோர்ட் நீதிபதியான தன்வந்து சிங் என்பவர் தன் நண்பரொருவரைப்பார்க்கப்போன போது ஒருவரின் இரு நாய்கள் ஒன்று விளையாடிக் கொண்டு நின்றபடியே அவருடைய காலேக் கடித்து விட்டது. இவ்விஷயமாக திரு தன்வந்து சிங் வழக்குத் தொடர்ந்தார். கோர்ட்டார் "எந்த நாய்க்கும் ஒரு கடி கடிக்க உரிமை யுண்டு என்ற இங்கிலீஷ் சட்டப்படி வழக்கைத் தள்ளிவிட்டார்.

## பண்டித மாளவியாவுக்கு ஜுரம்.

### டாக்டர்களின் ஆலோசனே.

பண்டித மாளவியாவுக்கு ஜுரம் கண்டிருக்கிறது. இப்போது 101 டிகிரி ஜுரம் அடிக்கிறது. அவர் பலஹீனமடைந்திருக்கிருர். பூரண ஓய்வுடன் அவரிருக்கவேண்டுமென டாக்டர்கள் ஆலோசனே கூறுகிருர்கள். ஆனல் கவலேப்படுவதற்கு இடமொன்றுமில்லே.

## பர்மாவில் நிலவரிக் குறைவு.

ரங்கூன், பிப் 2—

கவர்ன்மெண்டு அறிக்கை யொன்று கூறுவதாவது:—

நெல்விலே குறைந்து விட்டதால் ஏற்பட்ட பொருளாதார நிலைமையை உத்தேசித்து அநநர்குப் பரிகாரம் செய்ய தற்காலிகமாக நிலவரியைக் குறைப்பது பற்றி யோசிக்கப்பட்டது. கடைசியில் 1932-33ம் வருஷத்துக்கு சௌத்திரி நிலவரியைக் குறைக்க முடிவு செய்யப்பட்டது.

## அறியவேண்டியவை.

உலகத்திலுள்ள ஜனத்தொகையில் ஐந்திலொருபாகம் அதாவது 352,986876 ஜனத்தொகை இந்தியாவிலிருக்கிருர்கள்.

நகரங்களில் கல்கத்தாவினுடைய ஜனத்தொகை அதிகம் 1419321.

பம்பாயின் ஜனத்தொகை 1,157,851.

மதராஸின் ஜனத்தொகை 647,228.

இந்து மதத்தை தழுவி இந்தியாவிலிருப்பவர்கள் 238 330,912.

இந்தியாவில் 77,743928 முஸ்லீம்கள் இருந்து வருகிருர்கள்.

கிருஸ்தவர்களும் 5961794 இருக்கிருர்கள்.

சீக்கியர்கள் 4306442 இந்தியாவிலிருந்து கொண்டிருக்கிருர்கள்.

இந்தியாவிலுள்ள ரயில்களில் 623000000 பிரயாணிகள் பிரயாணம் செய்திருக்கிருர்கள்.

இந்திய ராணுவத்திலிருப்பவர்கள் 150,000.

ஆங்கில ராணுவத்திலிருக்கும் நபர்கள் 60,000.

பூமியிலிருந்து சூரியன் 92,9 மில்லியன் மைல் தூரத்திலிருக்கிறது. அவனுடைய ருறுக்களவு 864,000 மைல் சூரியன் பூமியைக்காட்டிலும் 333432 மடங்கு பெரியது.

பூமியின் திட்டமான பரப்பளவு 196550000 சதுர மைல் அதில் தரை 55600000, சதுர மைலும் 141,050,000 சதுர மைல் ஜலமும் அடங்கியிருக்கிறது.

## முஸ்லிமின் இந்துக் கடவுள் வழிபாடு.

சேலம், பிப் 2—

சேலம் எலெக்டிரிக் நாடகக் கொட்டகையில் மதுரை பால விநோதசங்கீத சபையார் இந்த வாரம் ஆரம்பம் முதல் "பக்த ராமதாஸ்" என்ற ஆட்டத்தை நடத்திவருகிருர்கள். இதில்கடைசி சீனில் தானிஷா ஸ்ரீராமரைப் பூஜிப்பதாகக் காட்டப்படுவதாயும், ஒரு முஸ்லீம் ஒரு ஹிந்துக்கடவுளைப் பூஜிப்பதாகக்காட்டுவது இஸ்லாம் மதத்தின் கொள்கைக்குவிரோதமென்றும், அதை எடுத்துவிட வேண்டுமென்றும் சுமார் 150 பேர் கையொப்பமிட்ட ஒரு மகஜரை முஸ்லீம்கள் நேற்று டவுன் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜனப் சவுஸ் சிராசாயபுவிடம் சமர்ப்பித்தார்கள். இன்ஸ்பெக்டர் விசாரணை செய்துவிட்டு மனுவில் கண்டபடி நடந்தால் அதைமாற்றி நடத்துமாறு டிராமா கம்பெனியாருக்கு யோசனை கூறினர். பிறகு கலெக்டர் ஜில்லா சூப்பரின்டெண்டின் அபிப்பிராயப்படி போலீஸ் இன்ஸ்பெக்டர் இதர போலீஸ் உத்தியோகஸ்தரோடு நேற்றிரவு இந்த நாடகத்தை முழுதும் இருந்துபார்த்து, மனுவில் கண்ட விஷயங்கள் உண்மையா என்று கவனித்தார். அதிகாரிகள் பார்த்ததிலிருந்து நாடகத்தில் யாதொரு ஆக்ஷேபகரமானதும் புலப்படவில்லேயென்று கூறப்படுகிறது.

## சுபாஷ் பாபு ஐரோப்பாசெல்ல மறுக்கிருர்.

ஸ்ரீ சுபாஷ் சந்திரபோசை புரியிலிருக்கும் தம் பெற்ருேரைப் பார்க்க விடாததாலும் இத்தாலி, ஜீகோஸ்லோவேகியா ஆகிய தேசங்கள் விஜயாசர் செல்லவிடாததாலும் வியன்னுவுக்குப் பிரயாண சீட்டுக் கொடாததாலும் அவர் அங்கு செல்ல மறுத்துவிட்டார் என்றும் வியன்னுவில் தான் நல்ல டாக்டர்கள் இருப்பதாகத் தெரிகிறதென்றும் ஒரு பத்திரிகைச் செய்தி கூறுகிறது.

## மகாத்மா விடுதலை.

டில்லியிலிருந்து வெளியாகும் "நாஷனல் கால்" என்ற பத்திரிகையில் அதன் லண்டன் நிருபர் இவ்வாறு எழுதுகிறார்:—

மகாத்மாகாந்தியையும் அவருடைய சிஷ்யர்களையும் சிறையிலிருந்து விடுதலை செய்யும் விஷயமான பேச்சு டில்லிக்கும் இந்தியா ஆபீசுக்கும் (லண்டன்) இடையே நடைபெற்றுக் கொண்டிருந்ததைக் கேள்விப்பட்டேன். சமீபத்தில் நடைபெற்ற சர்வாதிகாரிகள் தினம், சுயேச்சை தினம் ஆகியவற்றில் நடந்த நிகழ்ச்சிகளிலிருந்து இன்னும் தேசிய வாதிகளை விடுதலை செய்வதற்கான தருணம் நெருங்கவில்லை யென்று தெரிவதாக டில்லி கூறுகிறது.

சுயேச்சை தினத்திலேற்பட்ட கைதுகளின் பின்பு லண்டனிலும் இந்தியருக்குப்பொதுப்படையாக மன்னிப்புக் கொடுக்கக்கூடாதென்ற உணர்ச்சி ஏற்பட்டிருக்கின்றது. என்றாலும் பொது மன்னிப்பு அளிக்கப்படவேண்டுமென்ற உணர்ச்சி இங்கிலாந்தில் வளர்ந்து வருகின்றதென்பதில் ஐயமில்லை.

### காங்கிரஸ் வகுப்பு.

சர்க்கார் மகாத்மா முதலியோர்களை விடுதலை செய்வதற்கு என்னென்ன நிபந்தனைகள் வகுக்கின்றார்களோ அவற்றை காங்கிரஸ் உபேக்ஷையாய் நிராகரிக்குமானால் இந்த வருடம் ஜூலை மாதம் வரையிலும் அவர்களது விடுதலையைப்பற்றிநினைக்கவேண்டிய தேவையில்லை.

இந்திய சர்க்கார், காங்கிரஸ்காரர்கட்குள்ளாகவே ஒரு வகுப்பார் சட்டமறுப்பைவிட்டு விட்டு சட்டசபைகளைக் கைப்பற்ற வேண்டுமென்று முயற்சிக்கிறார்கள் என்று நம்புகிறார்கள். மேலும் வொயிட் ஹாலு (லண்டனு)க்கும் டில்லிக்கும் எதிர்கால சீர்திருத்த அரசியலமைப்பையும் இந்தியாவில் நடந்து கொள்ள வேண்டிய முறையையும்பற்றி அபிப்பிராய வித்தியாச மேற்பட்டிருக்கின்றது. ஆகவே அரசப்பிரதிநிதி சீக்கிரத்தில் லண்டனுக்குச் சென்று இந்திய விஷயங்களைப்பற்றி யோசிக்க வேண்டுமென்று சொல்லப்படுகிறது.

### அரசப்பிரதிநிதியின் செல்வாக்கு.

லார்டுவெல்லிங்டன், இவ்வளவு பலமான அடக்கு முறையைக் கையாடி ஒடுக்க முயன்ற பிறகு மகாத்மாவுடன் ராஜிபேசி காங்கிரசோடு ஓர் ஒப்பந்தம் செய்ய முற்படுவதானால் அச்செய்கை அரசாங்கத்திற்குப் பெரிய அவமானமாகும் என்று பலமாக அபிப்பிராயப்படுகிறார். ஆகவே, சமீபத்தில் சர்க்கார் காங்கிரசுடன் ராஜி பேச முயல்வதானால் அது நிச்சயமாகவும் ஒரு புதிய வைசிராயின் மூலமாகவேயிருக்குமென்று அரசாங்கத்தாரோடு நெருங்கிப் பழகிய ஒரு நம்பத் தகுந்த மனிதர் என்னிடம் சொல்லுகிறார். இதனால் பிரிட்டிஷ் அரசாங்கம் லார்டு வெல்லிங்டன் செய்திருக்கும் வேலையை பாராட்டவில்லையென்பது கருத்தல்ல.

ஆகவே நான் இன்றைய நிலைமையிலிருந்து தெரிந்து கொள்வதென்னவென்றால், காங்கிரஸ் மகாசபையை சேர்ந்த ஒரு வகுப்பார் சட்டசபைகளைக் கைப்பற்றி அரசியலில் கலந்து கொள்வது வரையிலும் காங்கிரஸ்காரர்களை விடுதலை செய்யும் விஷயம் ஒத்திவைக்கப்படுமென்பதாகும்.

## 10000 ரூ நன்கொடை.

ஐக்கியமாகாணத்தைச் சேர்ந்த குமவான் குன்றுகளில் வசிக்கும் நாயக் ஜாதியாருடையே சீர்திருத்த ஆக்க வேலை செய்யும் பொருட்டு கோஸ்வாமி ஸ்ரீ தாமோதரலால்ஜி என்பவர் 10 ஆயிரம் ரூபாய் நன்கொடை யளித்திருக்கின்றார்.

## பர்மாவில் கலகக்கூட்டத்தினர் சேர்க்கை.

தாராவாடி ஜில்லாவிலும் ஹென்ஸடா ஜில்லாவிலும் சில மாதமாக மில்டெரி போலீசார் பஸ் வண்டிகளில் செல்லுவதும் திரும்புவதுமாக இருந்து வந்தனர். இதற்குக் காரணம் யாதெனில் கிராமத்தினர் போலீசார் நடமாட்டத்தைக் கண்டு பயந்து மீண்டும் கலகக்கூட்டத்தினர் எவரேனும் இருப்பின் அவர்களுடன் சேரவிடாமலும், இத்தகைய கூட்டத்தார் எவரேனுமிருப்பின் அவர்களை ஆரம்பத்திலேயே கைது செய்வதெனவும் கண்ணோட்டமாக விருந்துவந்தனர்.

தாராவடி ஜில்லாவின் மக்கள் மில்டரி போலீசாரைக்கொண்டு பயமுறுத்துவது சற்றும் பொருந்தாதெனவும் இதனைக்கண்டு பெரிதும் அதிருப்தியடைந்திருப்பதாகவும் அக்கடி பர்மிய பத்திரிகைகளில் சிலர் தகவல் தெரிவித்தனர்.

### பச்சை குத்தலா?

ஹென்சடா, தாராவாடிஜில்லாக்களின்சில பாகங்களில் பச்சைகுத்தப்பட்டு ஆள்சேர்க்கப்படுவதாக தகுந்தவிடங்களிலிருந்து போலீசாருக்குத் தகவல் கிடைத்துக் கொண்டிருந்ததால் போலீசார் அவ்வப்போது மில்டெரி அதிகாரிகளுக்கு தகவல் தெரிவித்துக்கொண்டு முன் ஜாக்கிரதையாக இருந்துவந்தனர். பின்னரும் இச்செய்தி கிடைத்துக் கொண்டிருந்ததால் 17வது டோங்ராஸ் மில்டெரி போலீசார் கொடிகளுடன் தாராவாடி ஜில்லாவிற்கு அனுப்பிவைக்கப்பட்டுள்ளனர். என்சடா ஜில்லாவிற்கும் சில மில்டெரி படைகள் அனுப்பிவைக்கப்பட்டன. இதுவரை போலீசாருக்கு கிடைத்திருக்கும் தகவலில் பச்சை குத்தப்பட்டு வருவதைத் தவிர வேறு செய்திகள் கிடையாது. இவ்விரு ஜில்லாக்களிலும் கலகக்கூட்டத்தினரின் எத்தகைய முன்னேற்பாடான வேலைகளும் கிடையாது ஆனால் துருப்புகள் முன் ஜாக்கிரதையாக கவனித்து வருகின்றனர்.

### வரிவசூல் மும்முரம்.

தாராவாடி ஜில்லாவில் வரி வசூலானது மில்டெரி போலீசாரின் உதவியுடன் பலவந்தமாக வசூலிக்கப்படும் தகவல்கிடைத்துக்கொண்டிருப்பதாக சட்டசபை மெம்பரும் பிரபல தேசீயத்தலைவருமான ஊசிலேய்ங் தெரிவித்து தற்காலிகமாக வரிவசூலை ஒத்திவைக்க, வேண்டுமெனவும் சட்டசபையில் தீர்மானம் கொண்டுவந்திருக்க அத்தீர்மானங்கள் ஆலோசிக்கப்படுவதற்கு முன்னதாகவே அதிகாரிகள் வரிவசூலுக்கு முற்பட்டதைக்கண்டு அப்பகுதியிலுள்ள பர்மியர்கள் பெரிதும் அதிருப்தியடைந்துள்ளதாக மீண்டும் தெரிவித்துள்ளார். (பர்மாநாடு)

## அகில இந்திய நிர்வாணிகள் சங்கம்.

இந்தியாவுக்குள்ளும் நிர்வாண இயக்கம் புகுந்துளது. ஒழுக்கத்தை வளர்க்கவும், ஆரோக்கியத்தை அபிவிருத்தி செய்யவும், தேகக்கட்டை செம்மைப்படுத்துவதற்குமாக "அகிலஇந்திய நிர்வாணிகள் சங்கம்" என்கின்ற ஒரு சங்கம் ஷியால் கோட்டில் நிறுவப்பட்டுளது.

அச்சங்கம் நிர்வாண இயக்க அபிமானிகளாகிய எல்லா ஆண் பெண்களையும், எந்த வயதானவராயிருந்த போதிலும் சேர்த்து வருகின்றது. நிர்வாணத்தின் சிறப்பைப்பேசுகின்ற பல சங்கங்களும் ஆங்காங்கு நிறுவுகின்றது. அச்சங்கம் தேசீயத்திலோ மதத்திலோ தலையிடுவதில்லையென்று வாக்குறுதி செய்கிறது.

## அவுக்கான் நிலச்சுவான்தார்கள் கூட்டம்.

அவுக்கானில் ஜனவரி 30ந் தேதி மாலை 5 மணிக்கு நிலச்சுவான்தார்களின் கூட்டமொன்று நடைபெற்றது. அதில் அவ்வூர் பிரமுகரான யுபோக்யூ என்பவர் தலைமை வகித்தார். அக்கூட்டத்தில் ஏராளமான தனவணிகர்களும் பர்மிய மிராசுதார்களும் கலந்து கொண்டனர். தனவணிகர்களில் சிலர், ஆர். எம். பி. எஸ். பழனியப்ப செட்டியார், ஆர். எம். கே. பழனியப்ப செட்டியார், எம். கே. காசி விஸ்வநாதன் செட்டியார், எம். ஆர். ஆர். ஆர் எம். பழனியப்ப செட்டியார், பி எல். பி எல். சிதம்பரம் செட்டியாராகியோராவர். அக்கூட்டத்தில் அடியில் வரும் தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன.

(1) ஊப்போச்சு தலைமையில் கூடிய அவுக்கான் நிலச்சுவான்தார்களின இப்பொதுக் கூட்டம் சர்க்காருக்குத் தெரிவித்துக் கொள்வது யாதெனில்; நெல் விலை பெரிதும் வீழ்ச்சியடைந்து விட்டமையால் 1932—33 ம் வருடத்திய நிலவரியை நிலச்சுவான்தார்கள் செலுத்துவதற்கு ஏதுவில்லை—சக்தியில்லை. ஆகையால் தற்காலம் நிலவும் வரி விகிதத்தை 100 க்கு 50 ஆகக் குறைவான வரியை ஜூன் மாதம் வசூலிக்க வேண்டும்; அன்றேல் 100 கூடைக்கு 150 ரூபாய் விலை வைத்து ரொக்கத்திற்கு பதிலாக நெல்லை நில வரிக்காகப் பெற்றுக் கொள்ள வேண்டும். அதன்படி சர்க்கார்விரைவினில் முன்வந்து ரெவினியூ அதிகாரிகளுக்கு உத்திரவிட இப்பொதுக் கூட்டம் கேட்டுக் கொள்கிறது.

(2) இன்சீன் ஜில்லா நிலச்சுவான்தார்களுக்கு நிலவரி அதிகமாக விதிக்கப்பெற்றிருப்பதால் மேற்கண்ட முறையில் வரியைக் குறைத்து விசேஷ சலுகை காட்ட சர்க்காரை அவுக்கான் நிலச்சுவான்தார்கள் வேண்டிக் கொள்கின்றனர். அவ்விதம் வரியைக் குறைக்காவிடில் மேற்கண்ட விலை வைத்து நெல்லை வரிப்பணத்திற்கு பதிலாக ஏற்றுக்கொள்ள வேண்டிக் கொள்கின்றனர்.

(3) மேற்கண்ட தீர்மானங்களை சர்க்காருக்கும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கும் அறிவிக்க இப் பொதுக் கூட்டம் தலைவருக்கு அதிகாரமளிக்கிறது.

### புதிய ஹோட்டல்.

லேடி வில்லிங்டன் (வைசிராயின் மனைவி) அதிகமாக விருப்பங்காட்டி வரும் ஒரு ஹோட்டல் டில்லியில் கட்டப்படுகிறது. அதற்கு 4 மாடிகளுண்டு. அதில் 400 மக்கள் ஏககாலத்தில் உணவருந்தலாம்.

## கண்டனூரில் சிறந்த சங்கீத கச்சேரி.

### திரு. S. P. வீரப்பா அவர்கள் வைரப்பதக்கம் பரிசளிக்கப்பட்டார்.

7-2-33 மாலை 3-மணிக்கு கண்டனூர் மு. நெ. ராம. லெ. நெல்லியான் செட்டியார் அவர்கள் வீட்டில் நடைபெற்ற மு. க. வீர. ராம. வீரப்பன் ஸ்வீகாரப்புதுமையின் சார்பாக சங்கீதக்கச்சேரி ஒன்று நிகழ்க அன்று ராஜபார்ட் புதுவயல் திரு. S. P. வீரப்பா அவர்கள் தமது சகாக்களுடனும் புதுவயல் சி. பி. சு. சி. சுப்பையா செட்டியார் முதலியவர்களுடனும் விஜயம் செய்தனர். அவர்களுக்கு புதுமை வீட்டார் புஷ்பமாலை சூட்டி உபசரித்தபின் பண்டிதர்கள் வீரப்பா அவர்களின் ஆழ்ந்த சங்கீத ஞானத்தையும் குலப்பெருமையையும், கூரிய வீரத்தையும் குறிப்பிட்ட உபசாரப்பத்திர அகவல் ஒன்றைப்பாடிக் கொடுத்தார். பிறகு வீரப்பா அவர்கள் இயைந்த பக்கவாத்தியங்களுடன் தியாகராஜ கீர்த்தனங்கள் போன்ற பல கீர்த்தனங்களையும், திருப்புகழாதிய தமிழ்க் கீர்த்தனங்களையும் அனைவரும் சிரம் அசைத்து ஹாவென மெச்சவும்—விழிகள் ஒன்றுபட்டு செவிகள் பருகவும் சங்கீதத் தேனைச் சோனுமாரியாகப் பொழிந்தார். இவர் வாய்ப்பாட்டிற்கு தகுந்தாற்போல் செல்லம் அய்யங்கார் அவர்களின் பிடிலும் S. ராமநாதய்யர் மிருதங்கமும் பங்காரு அய்யரின் கஞ்சிராவும் திருவேங்கிடம் அய்யங்கார் மோர்சிங்கும் திறமையாக நிகழ்ந்தன. பிறகு பஞ்சாயத்து போர்டு வைஸ் பிரஸிடெண்ட் திரு. க. வீரப்பனார் அவர்கள் எழுந்து, இற்றை நான் தனவைசிய இளைஞர்களின் எழுச்சியையும் வெற்றியையும் எடுத்துக் கூறி நமது மரபின் உயர்ந்த சங்கீத நுட்பங்களை யெல்லாம் கேட்டுக் கேட்டு புலமை நிறைந்த பல அறிஞர்களிருந்தும் உலகத்திற்கு திறமையை வெளிக்காட்ட வந்த பெருமை நமது வீரப்பாவையே சாருமென்றும், தனவணிக சரித்திரத்தின் புதிய அத்தியாயத்தில் நமது வீரப்பா அவர்களும் முதல் இடம் பெருவர் என்றும் இளைஞர்களின் முன்னேற்றத்திற்கு இவர் ஒருவழி காட்டியிருக்கிறதென்றும் புகழ்ந்து புதுமை வீட்டினரின் சார்பாக ஓர் அழகிய வைரமெடல் ஒன்றையும் பரிசளித்தார். வீரப்பா அவர்களும் அதைப் பெற்றுக் கொண்டு சில மொழிகளால் அழகுபடப் பதிலளித்தார். பின் மங்களம் பாடப்பட்டு கச்சேரி நிறைவேறிற்று.





## சீனர்கள்மீது செட்டியார் போட்ட வழக்கு.

சிங்கப்பூர் முரு. க. அ. க. முத்தையா செட்டியார் என்பவர் வீகோக்டாய், சங்கூன்வட் என்னும் இரு சீனர்கள் மீது ஜூன்மீ 12ஊ எழுதிய இரண்டு பிராம்சரி நோட்டுகளின் பாக்கி $2000,$570-க்கு பிராது போட்டிருந்தார். முதல்பிரதிவாதி பேங்ரப்ட் ஆதலால் வழக்கிற்குஆஜராகவில்லை. இரண்டாம் பிரதிவாதி அப்பணங்களிலிருந்து தான் யாதொரு பிரதி பிரயோஜனமும் அடையவில்லை என்றும் தான் இரண்டாவது நோட்டில் கையெழுத்துப் போட்ட பிறகு தன்னுடைய சம்மதம் கேட்காமல் அதை தன் கணக்கில் பத்தெழுதி இருப்பதாயும் கூறினர். நீதிபதி வாதியின் கணக்குகளை பரிசோதித்துப் பார்த்து இரண்டாம் பிரதிவாதி கூறுவதை உண்மையென ஏற்றுக் கொண்டார். ஆதலால் அந்த நோட்டுகளுக்குரிய பணம் இரண்டாம் பிரதிவாதியிட மிருந்து கிடைக்கவேண்டு மென்பதற்கு போதுமான ருஜு கொடுக்கப்படாமையால் இரண்டாம் பிரதிவாதிக்கு செலவு தொகை கொடுக்க வேண்டுமென்றும் முதல் பிரதிவாதி வாதிக்கு செலவு தொகை கொடுக்க வேண்டு மென்றும் நீதிபதி விட்லி அவர்கள் தீர்ப்பளித்தார்கள் — முன்னேற்றம்.

### பினங்கு முனிசிபாலிடியிடம் $ 6000 நஷ்டயீடு.

ஜோசப் ரீட் என்பவர் பினங்கு முனிசிபாலிட்டியின் பேரிலும் மற்றவர்களின் பேரிலும் எஸ்பிளனேட்டில் விளையாட்டுகளுக்காக கட்டப்பட்டிருந்த 25 அடிஉயரமுள்ள ஓர் அமைப்பு அஜாக்கிரதையாய் செய்யப்பட்டிருந்ததால் இடிந்து விழுந்து அதனால் உண்டான விபத்தினால் தன் மூளை கெட்டு யாதொரு வேலைக்கும் லாயக்கற்று போய்விட்டதால்தனக்கு $ 15000 நஷ்டயீடு கொடுக்கவேண்டுமென்று போட்டிருந்த வழக்கு நீதிபதி பிரிச்சார்டு அவர்கள் முன்பு விசாரணைக்குவந்தது. அந்த அமைப்பில் விளையாட்டுக்காரர்கள் ஏறிய போது அது இடிந்துவிட்டதுடன் அதனால் பலர் காயமுற்றனர். வாதி அந்த விளையாட்டைப்பார்த்துக்கொண்டு அருகில் நிற்கையில் இவர் தலையில் அந்த அமைப்பின் பெரிய உத்தரம் பலமாய் விழுந்து பிரக்ஞையற்றவராக்கி விட்டது. உடனே ஆஸ்பத்திரிக்கு கொண்டுபோகப்பட்ட போது அவரின் மூளையிலேயே கோளாறு ஏற்பட்டுவிட்டதாய் காணப்பட்டது. அதன் காரணமாய் இவ்வழக்குதொடரப்பட்டது. பல மாதங்கள் சிகிச்சை பெற்று வந்திருக்கிறார். இந்த வழக்கை சமரஸமாய் தீர்த்துக் கொள்ளும்படி ஆரம்பத்திலேயே நீதிபதி கூறியபடி இப்போது முனிசிபல் கமிஷனர்கள் வாதிக்கு நஷ்டயீடாய் $ 6000மும் செலவு $ 1200 மும் தருவதாய் ஒத்துக்கொண்டுவிட்டனர். நீதிபதியும் இதை சரியான பஞ்சாயத்தென ஒத்துக்கொண்டு மற்றவர்கள்மீது போட்டிருந்த வழக்குகளை தள்ளிவிட்டார்.

### சிங்கப்பூர் பீச் ரோட்டில் ஆயுதம் தாங்கிய கொள்ளை.

சிங்கப்பூர் பீச்ரோட்டில் சென்ற திங்கட்கிழமை இரவு கத்தி, ரிவால்வர் முதலான ஆயுதங்களோடு ஒரு கொள்ளைக் கூட்டத்தார் நுழைந்து சியாங்ஸ்ட்ரீட்டிலுள்ள ஒரு வீட்டில் நுழைந்து ஒருவரை குத்திப்போட்டு விட்டு அந்த வீட்டு சீனதவுக்கையை பயமுறுத்தி இருப்புப் பெட்டியைத் திறக்கச்செய்து அதிலிருந்த $ 100 எடுத்துக்கொண்டு ஓடிவிட்டார்கள்.

## 20,000 வருஷ முள்ள சவம்.

உலகில் அமெரிக்கப் பெண்களே அதிக அழகுடையவர்களெனக் கூறுவதுண்டு. சமீபத்தில் அமெரிக்காவில் சுமார் 20,000 வருஷங்கட்கு முன்னுள்ள ஒரு பெண்ணின் பிரேதத்தைக் கண்டுபிடித்தார்கள்; அப்பெண்ணுக்கு சுமார்17 வயதிருக்கும். அக்காலத்தில் அமெரிக்காவில் வசித்த பெண்களைவே யிருக்கக்கூடுமெனத் தெரிகிறது. அப்பெண் தற்கால அமெரிக்கப் பெண்ணைப்போல் அழகாயில்லை. சீனுவிலுள்ள பெண்ணைப் போல தட்டை மூக்கும், விரிந்த நாசித்துவாரங்களு மிருக்கின்றன. அன்றி பற்களும் பெரிதாக விருக்கின்றன: பிரேதத்தின் சாயல் மனிதக்குரங்குகளை ஒத்திருக்கிறது. அழகுக்காக அக்காலத்தில் மனிதர்கள் உபயோகித்து வந்த மண்டையோடுகள் எலும்பு மாலைகளையே இப்பெண்ணும் தரித்திருக்கிறாள். கையில் கட்டாரி இருக்கிறது; மார்பிலும் தோளிலும் கட்டாரி குத்துக்காயங்கள் இருக்கின்றன, அக்காலத்தில் எவரோ இப்பெண்ணைக்கட்டாரியால் குத்தி கொலை செய்து. சதா மூடுபனி மூடியிருக்கும் ஒரு குளத்தில் அந்தப் பிரேதத்தை எறிந்திருக்க வேண்டும். ஆனால் இயற்கையானது அப்பிரேதத்தை அழியவிடாமல் காப்பாற்றியிருக்கிறது. சமீபத்தில் அக்குளத்தை தோண்டி யெடுத்து ஒரு ரஸ்தா போட வேலை செய்தபோது மேற்கூறிய பெண்ணின் பிரேதத்தைக் கண்டெடுத்தார்கள். பெண்ணின் பிரேதம் சுமார் 20,000 வருடங்களுக்கு முன்னுள்ளதா யிருக்க வேண்டுமென நிபுணர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

### தங்கச் சங்கிலியை அறுத்த சீனன்.

ஓங்கம் யூன் என்னும் சீனப்பெண் தன் சகோதரி ஒருவருடன் ட்ராலி பஸ்ஸில் வந்து சிங்கப்பூர் ரோஷ்சார் ரோடும் பெங்கூலன் ஸ்டிரீட்டும் கூடுமிடத்தில் இறங்கி ஐந்தடியில் நடந்து போகையில் ஒரு சீனன் திடீரென அவள் கழுத்தில் போட்டிருந்த தங்கச்சங்கிலியை அறுத்துக்கொண்டு ஓடிவிட்டான். அவனை உடனே ஒரு போலீஸ்காரன் பிடித்து கைது செய்தான். இவன் அறுத்துக்கொண்டு ஓடும்போது கையிலிருந்து வாயில் எதையோ போட்டுக் கொண்டதை பார்த்ததாயும் அந்த பெண் கூறினள். போலீஸ்காரன் சாக்ஷியம் சொன்னதில் அவனை கைது செய்யும் போது அவனிடம் யாதொரு பொருளுமில்லை என்றான்.

தஞ்சம் ரூவிற்கு தனக்கு வரவேண்டிய பணம் வாங்கப்போய் விட்டு திரும்ப அவலக்ரோடு போவதற்காக அந்த வழியாய் வந்ததாகவும் அங்கு ஒரு சத்தத்தைக் கேட்டுப்பார்க்க ஒருவர் ஓடியதைப் பார்த்து தானும் அது என்ன வென்று பார்க்க ஓடுகையில் தன்னை கைதி செய்த தாயும் குற்றவாளி சொன்னான். அந்த சங்கிலியை விழுங்கி இருக்கலாமென எக்ஸ்ரேபரீக்ஷை செய்து பார்க்கப்பட்டது. உடலில் ஒன்றும் காணப்படவில்லை. வழக்கை விசாரித்த இரண்டாவது மாஜிஸ்திரேட் மிஸ்டர் ஹே அவன் குற்றவாளியெனக் கண்டு கொண்டு தீர்ப்பு கூறுவதை ஜனவரி மாதம் 30ஊ க்கு ஒத்தி வைத்திருக்கிறார்.

Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi.

